# காப்பியச் சிந்தனைகள்



தி. அ. சொக்கலிங்கம் எம். ஏ., எம்.லிட்.,




மீனாட்சி புத்தக நிலையம்
60, மேலக் கோபுரத் தெரு, மதுரை–1.

# முன்னுரை

காலஞ்சென்ற பேராசிரியர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களின் அருள் நிழலில் ஆராய்ச்சி மாணவனுகச் சில ஆண்டுகள் பயிலும் பேறு பெற்றேன். அப்போதுதான் இலக்கியப் பசியும், எழுத்துணர்வும் என்னுள் முளையிட்டன. என்னை அறியாமல் வளர்ந்து வந்த எழுத்துணர்வை அருமை அண்ணு திரு. 'சோமலெ' அவர்கள் சுட்டிக் காட்டிஞர்கள்; தூண்டியும் விட்டார்கள். இலக்கியத்தில் தோய்ந்த என் எண்ணச் சிதறலுக்குத் 'தமிழ் நாடு' ஞாயிறு மலர் இடம் அமைத்துத் தந்தது. அச் சீரிய நாளிதழில் அவ்வப் போது எழுதிய கட்டுரைகளில் சிலவற்றின் தொகுப்புத்தான் 'காப்பியச் சிந்தனைகள்'.

கம்பன், இளங்கோ, வில்லி, திருத்தக்கர் போன்ற பெரும் புலவர்களின் கருத்து வண்ணத்திலே பிறந்த காப்பியக் கருவூலங்களைக் கற்கும்போது யான்பெற்ற சிந்தனை அலைகளின் எதிரொலியே இந்நூல். புறத்திலிருந்தும், அகத்திலிருந்தும் ஒவ்வொரு கட்டுரை இதில் அமைந்துள்ளன. நூலின் தலைப்புக்கும் இவ்வமைப்புக்கும் தொடர்பில்லைதான்; என்ருலும் தமிழிலக்கியத்தின் காப்பிய வளர்ச்சிக்குக் கருவாய் அமைந்தவை நமது புற, அக இலக்கியங்கள் என்பதாலும், பெரும்பான்மைக் கட்டுரைகள் காப்பியங்களைச் சுற்றியே நிற்பதாலும் இப்பொதுத் தலைப்பினை அமைத்துள்ளேன்.

எனது பெருமதிப்பிற்கும், வணக்கத்திற்குமுரிய பேராசிரியர், பல் கலைச் செல்வர் திரு. தெ. பொ. மீ. அவர்கள் இந்நூலைப் படித்து அணிந்துரை நல்கி, ஆசியும் தந்தார்கள். அக் குழந்தை மனப் பேராசிரியரின் அன்புக்கும் அருளுக்கும் என்றும் நன்றியுடையேன்.

இந்நூல் வெளிவருவதில் எனக்குத் துணை நின்ற நண்பர் திரு இராம—சுந்தரம் அவர்களுக்கும் செவ்விய முறையில் இதனை வெளியிட்ட மீனாட்சி புத்தக நிலைய உரிமையாளர் திரு. செ. செல்லப்பன் அவர்கட்கும் என் இதயம் கலந்த நன்றி. இதில் காணும் கட்டுரைகளில் பலவற்றை நூல் வடிவில் வெளியிட அனுமதிதந்த 'தமிழ் நாடு' ஆசிரியருக்கு என் நன்றியும் வணக்கமும்.

*அன்பன்,*

11-9-61. **தி. அ. சொக்கலிங்கம்**

பேராசிரியர் தெ. பொ. மீனுட்சி சுந்தரனுர்

அவர்களின்

# அணிந்துரை

திரு. தி. அ. சொக்கலிங்கம், அன்ருடையச் செய்திகளையும் நகைச்சுவை ததும்பப் பேசி மகிழ் விப்பதனை அறிவேன். அது போலவே இலக்கிய நயத் தையும் தெள்ளத் தெளிய விளக்கி மகிழ்விக்கும் ஆற்றலும் பெற்றவர் என்பதனை இந்த நூலின் வழியே அறியும் பேறு பெற்றேன். பழைய இலக்கி யத்தில் ஆழ்ந்து விட்டாலும் இன்றைய உலகத்தை மறவாமல் பழைய படிப்பினையைப் புதிய உலகிற்கு எடுத்துக் காட்டுகிருர். அம்மட்டுமன்றி இலக்கிய இன்பம் ஒற்றுமைக் காட்சியில் சிறக்கிறது என் பதனை உணர்ந்த ஆசிரியர், ''இருகனவு'', ''இரு கடிதம்'' என்று இணைத்துக் கண்டு நயம் உணர்வது போலவே பிற கட்டுரைகளிலும் ஒப்புமை நயத் தின் வழியே ஆராயக் காண்கிருேம். ''யார் குற்றம்?'' என்பதில் கண்ணகியும், மாதவியும், கோவலனும், பாண்டியனும் தம் குற்றத்தை ஒப்பும் உயர்வையும், அங்கே தோன்றும் நுட்ப வேறு பாட் டையும் காணலாம். ''இலக்கியத்தில் போராட் டம்'' இத்தகைய மனப் போக்கில் எழுவது. ''காவி யத்துள் நாடகம்'' இருவேறு இலக்கிய வகைகளை ஒன்று காண்பது. பூழிவெங்கானம் ''மின்னெளிர் கானமா''கத் தோன்றுவதில் ஈடுபடுவதும் இத்

தகைய உள்ளமே ஆம். ''புதியதோர் முறுவல் பூத்தாள்'' என்ற சொற்றொடர் நம் மாசிரியரைப் பழைய முறுவல்யாது என நாடச் செய்கிறது. சூர்ப் பணகை மூக்கு இழந்தது புரந்தரனார் பெருந்தவ மாவதைக் கண்டான் கம்பன். ஆனால் ''மூக்கில் முகிழ்த்த போர்'' எனச் சூர்ப்பணகையின் கதை யைச் சுருக்கமாக நம் நண்பரே கூற முடியும்.

இவ்வாறு ஒவ்வொரு கட்டுரையும் மிக விரை விற் படித்து மூழ்கி எழுந்திருக்கக் கூடிய இன்ப இலக்கியச் சொல்லூற்றாக அமைந்திருக்கக் காண் கிறேன்.

ஆசிரியர் மேலும் பல நூல் எழுதி, இவ்வாறு தமிழுலகை மகிழ்வித்து மலரச் செய்வாராக.

இங்ஙனம்

அண்ணாமலை நகர்
8–9–61

தெ. பொ. மீனாட்சிசுந்தரன்

# பாசியும் பசலையும்

**வா**ழ்வின் நுணுக்கங்களை யெல்லாம் சிந்தனைத் திறத்தால் ஆராய்ந்து இலக்கியமாக்கிச் சொல்லில் வடித்துத் தந்தவர்கள் நம் முன்னோர்கள். அகத்தில், புறத்தில் காணும் வியத்தகு உண்மைகளை, உள்ளுணர் வின் எழுச்சிகளை விளக்கிக் காட்டிய வழிவழியின் முன் னோடிகள் நம் தமிழர்கள். தனி மனிதனின் உள்ளத்தில் ஏற்படும் ஆசாபாசங்களை, மன மாற்றங்களை, இலட்சிய எண்ணங்களை, விண்ணளவு விரியும் சிந்தனைத்திறனை யெல்லாம் இலக்கிய உருவுடன் நிலைபெறச் செய்த பெருமை தமிழருக்கு உண்டு. நண்பனின் உள்ளம் வருந்துமே என்று, அவன் நஞ்சினைத் தந்தாலும் தெரிந்தும் வாங்கி உண்ணுவதே தமிழன் கண்ட நயத்தக்க நாகரிகம். புறத்தோற்றத்தின் போலி நாகரிகம் வளர்ச்சியுற்ற இந்த நூற்றாண்டில் நம்மால் இவைகளை நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை. இந்த அளவுக்கு நுண்மையான உள்ளத்தைப் பற்றியெல்லாம் இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன்னமேயே ஆராய்ந்து அமைத்த இலக்கியம் நம்முடையது. தமிழகத்தின் பொது வாழ்வில் அகமாக மலர்ந்து புறமாகப் படர்ந்து சுற்றிப் பின்னிப் பிணைந்து திகழும் இவ்விலக்கியங்கள் நமது பரம்பரைச் சொத்து – வாழ வழி காட்டும் ஒளி விளக்கு.

பீடும் பெருமையும் பெற்ற நம் இலக்கியச் செல்வங் களுள் காதல் இலக்கியங்கள் – அக இலக்கியங்கள் – தனிச் சிறப்பு வாய்ந்தவை. குறிப்பால் கூடப் பெயர் சுட்டப்படாமல் ஒருவன் ஒருத்தி என்ற எல்லைக் கோட்டி னுள் காதல் வாழ்வின் திறத்தை யெல்லாம் அமைத்து

நுட்பமாக ஆராய்வது இவ்விலக்கியங்களின் அடிப்படை. நெடுநல்வாடை என்ற காதல் இலக்கியத்தில் இரண்டு வரிகள் இம்மரபுக்கு முரண்பாடாக இருந்த காரணத்தால் அந்த இலக்கியம் முழுதையுமே புறத்தில் அடக்கி விட்டான் அன்றையத் தமிழன். பெயர், வயது, அங்க அவயவ வருணனைகளோடு வெளிவரும் காதல் இலக்கியங்களைச் சுவைத்து மகிழும் இருபதாம் நூற்றுண்டு நாகரிக மக்களாகிய (?) நமக்கும், பண்பும் மரபும் வழுவாமல் காதல் என்ற புனிதமான தன்மையினை அழகுற எழுதிக் காட்டிய அன்றைய தமிழனுக்கும் இடையில் தான் எத்துணைப் பள்ளம்! அன்று வளர்ந்த சிந்தனையும் பண்பும் மெல்ல மெல்லச் செத்துவிட்டன போலும்!

அக்காலக் காதல் இலக்கியத்தில் ஒரு காட்சி – சிறு காட்சிதான் – ஆனால் சுவையானது. ஒருவனும் ஒருத்தியும் தம்முள் காதல் கொண்டனர். களவில் காதல் வளர்ந்தது. ஒருவர் பண்பை ஒருவர் உணர்ந்தனர். இருவர் தம் பெற்றோரும் செய்தியறிந்து அவர்களைக் கற்பு வழிப்படுத்தினர்; இணை பிரியாமல் இன்பமாக வாழ்ந்து வருகின்றனர். ஆனால், எப்போதும் அவளுடனேயே அவனால் இருக்கமுடியுமா? “எங்கே ஆடவர்கள் உழைப்பாளிகளாக இருக்கின்றார்களோ, அங்கேதான் வளம் கொழிக்கும்” என்பதை அறிந்தவன் தலைவன். ‘வினையே ஆடவர்க்கு உயிர்’ என்பதை உணர்ந்தவன் அவன். இல்வாழ்வினை இன்பமாக நடத்த உழைப்பில் வந்த பொருள் தேவை. எனவே, தலைவன் அவளைப் பிரிந்து பொருள் தேடச் செல்கிறான். “பிரியேன்; பிரியின் உயிர்தரியேன்” என்றெல்லாம் சொன்னவன் தான் அவன்; என்றாலும், என்ன–உழைக்காமல் இருந்து விட முடியுமா? கார்காலம் வந்ததும் திரும்பி வந்துவிடுவதாகச் சொல்லிவிட்டுப் பிரிகிறான். பிரிவு, தலைவியைச்

சுடுகின்றது. பிரிவுத் துன்பத்தால் அவள் நைந்து வருந்துகிருள். அவளது அழகிய நிறம் மாறுபாடடைகின்றது. இவ்வாறு கணவன் பிரிவதால் ஏற்படும் நிற வேறுபாட்டைத் தான் 'பசலை' எனக் கூறுவர். 'பசலை நோய்' 'பசலை படர்ந்தது' என்று கூறுவது இலக்கிய மரபு. 'பீர்க்கம் பூவைப் போன்ற நிற வேறுபாடு' என இப் பசலைக்கு விளக்கம் தருவார்கள். நம் தலைவிக்கும் இந்த நிற வேறுபாடு வந்துவிட்டது. பசலை நோயும், பிரிவுத் துன்பமும் படுத்தும்பாடு கொஞ்ச நஞ்சமன்று.

இந்தத் துன்பங்களை யெல்லாம் ஒரு தலைவியின் வாயிலாகத் திருவள்ளுவர் பேசுகிருர். அவரது கற்பனையில் உருவாகிய தலைவி பேசுவதைக் கேளுங்கள். "விளக்கு அணைந்தவுடன் இருள் கவ்வுகின்றது; விளக்கின் மறைவை நோக்கிக் காத்திருக்கும் இருளைப் போலத் தான், கணவனுடைய பிரிவைப் பார்த்துப் பசலை காத்திருக்கின்றது. தழுவிக் கிடந்த நானும் அவரும் இமைப் பொழுதுதான் பிரிந்தோம் – அவ்வளவுதான் – பசலை என் மேனியை அள்ளிக்கொண்டது. காம நோயையும், பசலை நிறத்தையும் எனக்குக் கொடுத்துவிட்டு, என் சாயலையும், நாணத்தையும் என்னிடமிருந்து பெற்றுக் கொண்டாரே!"—என்றெல்லாம் ஏங்குகிருள் வள்ளுவர் தலைவி. காதலின் நுண்மையினையும், அன்பு உள்ளத்தில் பிரிவால் ஏற்படும் சலனத்தையும், அதன் அடிப்படையில் பிறந்த உடல் வேறுபாட்டையும் பண்பு சிதையாமல் காட்டுகிருர் வள்ளுவர்.

குறுந்தொகை என்ற சங்க காலக் காதல் இலக்கியத்துள் ஒரு காட்சி. பிரிவினைத் தாங்கமுடியாத தலைவி தோழியுடன் பேசிக்கொண்டிருக்கிருள். பேச்சால் மனச் சுமை குறையும் என்பது அவளது எண்ணம். நான்கு வரிகளில் அழகாக, திறமாக, உவமையோடு தன் நிலை

யினை வருணிக்கிருள் தலைவி. "நீர் நிறைந்த குளத்தி லுள்ள பாசியைப் போன்றதுதான் என் மேலுள்ள பசலை நிறம். நீரைக் கையால் தொட்டவுடன் பாசி நீங்கும். கையை எடுத்தவுடன் மீண்டும் படரும் – இது பாசியின் இயல்பு. இது போலத்தான் அவர் என்னைத் தொட்டுத் தழுவியவுடன் பசலை எங்கோ போய் ஒளிந்துகொள் கின்றது. சிறிது நேரம் அவர் என்னைப் பிரிந்து விட்டாலோ, உடனே ஓடோடி வருகின்றது பசலை. எங் கிருந்துதான் வருகின்றதோ! இதற்கு என்னடி செய் வேன்" – என்று அழகாகக் கூறுகிருள்.

"ஊர் உண் கேணி உண்துறை தொக்க
பாசி அற்றே பசலை; காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி,
விடுவுழி விடுவுழிப் பரத்தலானே"

(குறுந்தொகை-399)

என இக்காட்சியினைச் சொல்லில் வடித்தெடுத்துப் படம் பிடித்துக் காட்டுகிருர் பரணர் என்ற புலவர்.

பரணரின் இப்பாடலைப் படித்து மகிழ்ந்துகொண்டே யிருக்கலாம். பாசியைப் பசலைக்கு உவமையாகச் சொன் னது மிகவும் சிறப்பு வாய்ந்ததாகும். 'தொடுவுழித் தொடுவுழி', என்பதிலுள்ள அழுத்தமும், 'விடுவுழி விடுவுழி' என்பதிலுள்ள விரைவும் நம்மை எங்கோ கொண்டு செல்கின்றன. சிந்தனை சிதையாத, பகுத்தறிவு வற்ருத, பண்பு குலையாத ஒரு சமுதாயத்தில்தான் இது போன்ற உயர்ந்த கவிதைகள், எண்ணங்கள் தோன்ற முடியும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் நாம் பெற்றிருந்த பெருவாழ்வை எண்ணி எண்ணி மகிழ் கிறோம். நுண்மையான காதலைப் பற்றி, பிரிவைப் பற்றி, அதில் ஏற்படும் உள்ள மாறுபாடு, உடல் வேறுபாடு இவை பற்றித் தரம் குறையாமல் பண்பை அடியொற்றிப்

பாடும் நமது இலக்கியப் பரம்பரையை நினைந்து நினைந்து வாழ்த்துகிறோம்.

இதே நேரத்தில் இன்றுள்ள தமிழகமும் நமது சிந்தனையில் படுகின்றது. 'சிந்தனையும் செயலும் பாசியால் மூடப்பட்டு விட்டன. பசலை படர்ந்த தலைவியைப்போல், பாசி படர்ந்த குளத்தைப் போல், தமிழகத்தின் இன்றைய வாழ்வு இருக்கின்றது. மொழியில், கலையில், சமயத்தில், வாழ்வில், இறையுணர்வில், அறத்தில், அரசியலில் – எங்குமே பாசி மூடிய வாழ்வாக நமது வாழ்வு தோன்று கின்றது. அஞ்சி அஞ்சிச் செத்து மடமையில் துடிக் கிறோம். அறிவு என்னும் தெளிந்த நீரோடை வழி தப்பி, உயிரற்ற பழக்கம் என்ற பாலைவனத்திலே பாய்ந்து வறண்டு விடுகின்றது. மொழியை மூடியிருக்கும் பாசி நீங்கினால் ஏனைய பாசிகள் தாமே மறையும். 'மொழிப் பாசி' நீக்குவது இளைஞர் கடன்.

2540

## அறம் உரைத்த புலவன்

**போ**ரில் புழுங்கும் இன்றைய புத்துலகில் நாம் வாழ்கிறோம். மேற்கும் கிழக்கும் நட்புடன் கைகோத்து வாழ்கின்றன என்றாலும், அந்த நட்புக் கரங்களிடை நமக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. அரசியல் வானின் கரு மேகங்கள் எந்த வினாடி போர் மழை பொழியுமோ என உலகம் அஞ்சுகின்றது; நாமும் அஞ்சுகிறோம். வெண் புறாவைப் பறக்க விடச் சிலர் முயல்கின்றனர்; ஆனால் வல்லூறுகளாகப் பலர் வளைய வளைய வருகின்றனர். இன்றைய அரசியலில் அறத்திற்கு ஆக்கம் இல்லை. அரசியல் சூதாட்டத்தில் ஏமாந்தவனை ஏமாற்றுதல் வேண்டும் என்பதுதான் புத்துலகின் சூத்திரம். இன்றைய இச் சூழ்நிலையினை மனத்தில் இருத்தி ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னர் நாம் நோக்குதல் வேண்டும்.

உறையூர்—சோழப் பேரரசின் தலைநகராக இருந்த காலம். 'புகழமைந்த அரசியல் பெருநகர்' என்று தாலமியால் (கி. பி. 2–ல் தமிழகம் வந்த யாத்திரிகன்) பாராட்டப்பட்ட இத்திருநகரிலே பல ஆண்டுகள் வரையில் சோழர் பரம்பரை வாழ்ந்தது. புகழ்பெற்ற கரிகாலனும், போர் வெறி கொண்ட நலங்கிள்ளியும் ஆண்டு சிறப்புற்ற தலைநகர் இது. காவிரித் தென்கரையில் கவினுற அமைந்த இந்நகரம், பாண்டி நாட்டுப் பாஞ்சாலங்குறிச்சியைப் போல, வீர நிலம் வாய்ந்தது என்பது மரபு. இச்சிறப்பமைந்த உறையூரில்தான் கிள்ளிவளவன் என்ற சோழன் ஆண்டு வந்தான். இவன் காலத்தில் நடந்த ஒரு நிகழ்ச்சி.

மண்ணுசை இல்லாத மன்னர் மிகச் சிலரே. நாட்டை விரிவு படுத்த வேண்டும்; அண்டை நிலத்தை ஆட்கொள்ள வேண்டும், என்பவையே அன்றிலிருந்து இன்றுவரை கேட்கும் அரசியல் 'அடிநாதம்'. ஆனல் அன்று அறநெறியுண்டு; இன்ருே மறநெறிதான் மல்கி நிற்கின்றது. அறமும் அன்பும் பொய்யாய்ப் போய் விட்டன. :சோழன் கிள்ளிவளவனும் மண்ணுசை உள்ளவன் தான்; அண்டை நாடான சேர நாட்டைக் கைப்பற்றக் கருதி அதன் தலைநகராகிய கரூரின் மேல் படையெடுக்க நினைக்கிருன். மாற்ருர் தூங்கும்போது படையெடுத்தலும், ஓடும்போது தாக்குதலும் இன்றைய 'நவீன முறைகள்'. ஆனல் கிள்ளிவளவனே, தான் படையெடுத்து வருவதை முன்னமே அறிவித்து விடுகிருன். இதன் அறிகுறியாகக் கரூரைச் சுற்றி யுள்ள சேரனின் காவல் மரங்களை வெட்ட ஆணை யிடுகிருன்.

இன்றைய உலகில் நாட்டின் கொடிக்கு எவ்வளவு சிறப்பு உண்டோ அவ்வளவு சிறப்பு அன்றைய 'காவல் மரத்துக்கும்' உண்டு. ஒரு நாட்டின் வீரம், மானம், பண்பு—எல்லாம் காவல் மரத்தில்தான் அடங்கியிருக்கும். காவல் மரத்துக்கு ஆபத்து என்ருல் கோழைக்கும் வீர நெஞ்சம் வந்துவிடும். மாற்று நாட்டான், ஓர் அரச னுடைய காவல் மரத்தை வெட்டுகிருன் என்ருல் போருக்கு அழைக்கிருன் என்பது பொருள். எனவே தான் கிள்ளிவளவன் கரூரின் காவல் மரங்களை வெட்டச் செய்து சேரனுக்குப் 'போ்ரழைப்பு' விடுத்தான்.

ஆனல் சேரனே, வீரமற்ற காரணத்தாலோ, அன்றி வேறு காரணங்களாலோ பதிலளிக்கவில்லை. நாட்டின் உயிரன்ன, மானம் நிகர் காவல் மரத்தினை மாற்ருன்

வெட்டும் பேரொலி கேட்டும் சேரன் 'போரொலி' எழுப்பவில்லை. அமைதியாகவே தன் மாளிகையில் இருந்தான். அவன் வீரர்களும் அப்படியே! பார்த்தான் கிள்ளிவளவன். "நல்ல வாய்ப்பு! சேரனுக்கோ படை பல மில்லை. சில விநாடிகளில் சேர நன்நாடு சோழ மண்டலத்துடன்.... நாமோ எச்சரிக்கை விடுத்தாகி விட்டது. பதில் இல்லை" என்று தனக்குள் நினைத்து மகிழ்ந்தான். படை வீரரை நோக்கி "போர்ப் பறை ஒலிக் கட்டும்; கரூர் நோக்கிப் படை புறப்படட்டும்"—என்று ஆணை பிறப்பித்தான். படையும் புறப்படத் தயாராகி விட்டது.

இவ்வேளை, செய்தி கேட்டு ஓடோடி வந்தார் ஆலத்தூர் கிழார் என்ற புலவர். கிள்ளியை நிமிர்ந்து நோக்கினார். அவன் முகத்திலோ போர் வெறியினைக் கண்டார்; சேரநாடு கிடைத்துவிடும் என்ற மகிழ்ச்சி யினையும் கண்டார். படைகளிடமோ ஒரே ஆரவாரம். காவல் மரங்களை வெட்டும் ஒலியோ காற்றில் மிதந்து வருகின்றது. மீண்டும் மன்னனின் முகத்தைப் பார்த்தார் புலவர். அதே வெறியினைக் கண்டார். ஆத்திரம் தாங்க வில்லை புலவருக்கு. பேச ஆரம்பிக்கிறார் "மன்னா! உனக்கு வெட்கமில்லையா"—என்று. வளவனுக்கோ ஒன்றும் புரியவில்லை. தன் மதிப்புக்கும் அன்புக்கும் பாத்திரமான புலவரா இப்படிப் பேசுகிறார்? நாட்டை விரிவு படுத்துவது தவறல்லவே! முறை தவறியும் போர் செய்யவில்லையே! பின் ஏன் புலவர் இவ்வாறு சொல் கிறார்?"—என்ற வினாத் தோன்றப் புலவர் முகம் நோக் கினான் புரவலன். ஆரவாரம் மிகுந்த படைகளும் புலவர் முகம் நோக்கின. பேச்சைத் தொடர்கிறார் புலவர்; "வளவா! சற்றுச் சிந்தித்துப்பார்! சேரனை நீ வென்றா லும் சரி. வெல்லாவிட்டாலும் சரி! உன் புகழ் நிலைத்த

தொன்று. இதை நீயே அறிவாய். அவன் காவல் மரத்தை வெட்டும்படி ஆணையிட்டாய். முறையானது தான். தங்கள் நாட்டின் ஆவியன்ன காவல் மரம் வெட்டப் படும் ஒலியினைச் சேரனும் கேட்கிருன். கேட்டும் அமைதியாக இருக்கிருன். போர் செய்யும் ஆற்றல் அவனுக்கு இல்லை என்பதுதானே பொருள். வீரனும் வீரனும் சந்திப்பதன்ரு போர் நெறி; உன் வீரத்திற்கு இணையானவனையன்ரு நீ எதிர்க்க வேண்டும். காவல் மரத்தின் வெட்டொலி கேட்டும், வெளிவராமலிருந்த வீரமற்ற சேரனை எதிர்ப்பதற்கு ஒரு படையெடுப்பா! இதற்கு முரசின் முழக்கம் வேறு வேண்டுமா? வீரர் களின் ஆரவாரம் அவசியமா? இந்த உன் செயலை நினைத்தாலே வெட்கித் தலை குனிய வேண்டியிருக் கின்றதே!

"...................................
....................................
கடிமரம் தடியும் ஓசை தன்னூர்
நெடுமதில் வரைப்பில் கடிமனை இயம்ப
ஆங்கு இனிதிருந்த வேந்தனொடு ஈங்குநின்
சிலைத்தார் முரசம் கறங்க
மலைத்தனை என்பது நாணுத்தக வுடைத்தே"

(புறம்–36)

என்று உரிமையோடு பேசுகிருர் புலவர். கேட்ட கிள்ளி வளவன் உடனே தன் போர் முயற்சியினைக் கை விட்டானு என்பது இங்குக் கேள்வியன்று. மன்னன் தயவில் வயிறு வளர்க்கும் புலவனின் பண்பார்ந்த உள்ளமும்; சோழப் பேரரசின் மன்னனை 'நாண மில்லையா உனக்கு' எனக் கேட்கும் நெஞ்சுரமும் இடித் துரைக்கும் இனிய பண்பும் நம்மைக் கவருகின்றன.

இன்றைய உலகில் அமைச்சர்களையும், மன்னர்களையும் சுற்றி வயிறு வளர்க்கும் கூட்டத்தினையும் நாம் காண்கிறோம். எத்தனை பேருக்கு இந்த நெஞ்சுறுதியும் அஞ்சாமையும் இருக்கின்றன? இடித்துரைக்கும் நல்லவர்கள் அரசியலில் இருந்தால் போர் ஒடுங்கும்; புகழ் ஒடுங்காது.

# இரு கடிதங்கள்

இரு கடிதங்கள்—ஆம், இன்று நேற்றல்ல! 1500 ஆண்டுகட்கு முன்பு எழுதப்பட்டவை. அதுவும் காத லியின் உள்ளத்திலே காதலனுக்காகப் பிறந்து எழுதப் பட்ட கடிதங்கள். முதல் கடிதத்தைப் பார்க்காமலேயே வெறுத்து விடுகிருன் காதலன். இரண்டாவது கடிதத்தை விருப்புடன் சுவைத்துப் படிக்கிருன் இக் கடிதங்களின் வனப்பும் இவைகளின் பின்னணியாகத் திகழும் உடல் நூல், உளநூல் தத்துவங்களும் நம் கருத்தினைக் கவர் கின்றன; சிந்தனையைத் தூண்டுகின்றன.

காவிரிப்பூம் பட்டினத்துக் கடற்கரை. அந்த வெண் மணலிலே கலையழகு தோன்றக் கருத்துடன் அமைத்த ஒரு பந்தல். அதன் நிழலில் கோவலனும் மாதவியும் அமர்ந்திருக்கின்றனர். ஏதேதோ இன்பமாகப் பேசு கின்றனர். இறுதியில் காதலன் கோவலன் 'கானல் வரி' பாடுகின்ருன். இசையின் உருவிலே விதி விளையாடு கின்றது. ஊடல் பிறந்தது. கோவலன் மாதவி இவர் களின் கருத்தொருமித்த காதலின் இன்ப வாழவும் முடிகின்றது. துன்பம் தொடங்குகின்றது.

ஊடல் கொண்ட கோவலன் மாதவியை விலைமகள் என வெறுத்து, கட்டிய மனைவி கண்ணகியிடம் செல்லு கிருன். மாதவியும் ஊடல் கொண்ட உள்ளத்தோடு தனியே வீடு வந்தடைகிருள். பல ஆண்டுகள் பிரியாது தன்னுடன் ஒன்றி வாழ்ந்தவன் கோவலன். எனவே பிரிவு அவளை வாட்டுகின்றது. தனிமை மாதவிக்கு இனிமை தரவில்லை. எல்லாப் பொருள்களிடத்தும் வெறுப்பு ஏற்படுகின்றது. பாலும் கசந்தது; படுக்கையும்

நொந்தது. அமைதியை விரும்பினுள். அது கிடைக்கவில்லே; யாழை எடுத்தாள். தாளம் தவறியது. எப்படியும் கோவலன் வந்து விடுவான் என எதிர் பார்த்தாள். ஆனல் வரவில்லே. முன்பும் பலமுறை இவர்கள் வாழ்வில் ஊடல் தோன்றியதுண்டு. ஆனல் பிரிந்து சென்றது கிடையாது. நேரம் செல்லச் செல்ல மாதவியின் உறுதி குலேந்தது. காதல் வேதனையால் தான்படும் துயரினே ஒரு கடிதம் மூலம் எழுதியனுப்பக் கருதினுள். வெண்மையான தாழை மடல் எழுதும் தாளாயிற்று; பித்திகை அரும்பு எழுதுகோலாயிற்று. செம்பஞ்சுக் குழம்பிலே தோய்த்து எழுத ஆரம்பிக்கிருள் மாதவி.

"மன்னுயிர் எல்லாம் மகிழ்துணே புணர்க்கும்
இன்னிள வேனில் இளவர சாளன்
அந்திப் போதகத்து அரும்பிடர்த் தோன்றிய
திங்கட் செல்வனும் செவ்வியன் அல்லன் ;
புணர்ந்த மாக்கள் பொழுதிடைப் படுப்பினும்
தணந்த மாக்கள் தந்துணே மறப்பினும்
நறும்பூ வாளியின் நல்லுயிர் கோடல்
இரும்பூது அன்று இஃது அறிந்தீமின்"

(வேனிற்காதை 56-63)

என்று வாயால் சொல்லிச் சொல்லிக் கடிதத்தை எழுதி முடித்தாள் மாதவி.

கோவலனின் கூர்த்த மதியினே மாதவி நன்கு அறிவாள். எனவேதான் காதல் நோயால் தான்படும் துன்பத்தைக் குறிப்பாகக் கடிதத்தில் கூறுகிருள். பரத்தையர் குடியில் பிறந்தாலும் பண்பையும் கற்பையும் அணியெனப் பூண்டவள் மாதவி. சேற்றிலும் செந்தாமரை மலருமன்ருே? நாணமாகிய எல்லேக் கோட்டினேக் கடந்து விடாமல் தன் உள்ளத்துக் காதல் உணர்வைப் புலப்படுத்தி எழுதிய திறமே இதற்குச் சான்று.

பொதுவாக மலரின் அழகும் மணமும் காதலைத் தூண்டிவிடும் சக்தி வாய்ந்தவை. கோவலனை இழுக்கும் திறன் மலர்களுக்கு உண்டு என்பதை மாதவி நன்கு அறிவாள். எனவே தாழை மடலில் அமைத்த தன் கருத்தை நறுமலர் மாலையுடன் இணைத்தாள். இக்கடித மாலையைத் தன்னுடைய தோழி வசந்தமாலை மூலம் கோவலனுக்கு அனுப்ப நினைத்த மாதவி, மலர்முடங்கலை அவளிடம் தந்து,

> " தூமலர் மாலையின் துணிபொருள் எல்லாம்
> கோவலற்கு அளித்துக் கொணர்க ஈங்கு..."

(வேனிற்காதை70-71)

எனக் கூறி அனுப்புகிறாள். மாதவியின் காதல் உள்ளம் கோவலன் வரவை விரும்பியது. கடை வீதியில் சென்று கொண்டிருந்த கோவலனிடம் வசந்தமாலை கடிதத்தைத் தருகிறாள். ஆனால் அவனோ அன்பின் அழைப்பான அக்கடிதத்தைக் கண் திறந்தும் பார்க்கவில்லை. வாங்கவே மறுத்து விடுகிறான். பலவிதக் காரணங்களால் அவன் உள்ளத்தில் உறுதி பிறந்துவிடுகின்றது. மாதவி மிக்க கவனத்துடன் தொடுத்து அனுப்பிய மாலையினால் கூட அவனது உள்ளஃதுறுதியினைக் குலைக்க முடியவில்லை. அவளது நிலையினையும் துயரினையும் வசந்தமாலை உருக்கத்துடன் கூறினாள்; பலன் இல்லை. மாதவியிடம் கோவலன் கொண்ட ஊடல் வெருப்பாகி விடுகின்றது. வசந்தமாலையோ செய்வதறியாது திகைத்து மீண்டாள். செய்தி அறிந்த மாதவி

> " மாலை வாரார் ஆயினும் மாணிழை
> காலை காண்குவம்......"

(வேனிற்காதை115-116)

எனக் கூறிக் கையறு நெஞ்சமொடு கலங்கினாள்.

மாலை கழிந்தது; காலையும் வந்தது. ஆனால் கோவலன் வரவில்லை. புகார் நகரத்தை விட்டே அவன் போய்விட்டான் என்ற செய்தியினை மாதவி அறிந்தாள், மனம் நொந்தாள். காதல் மனைவியாம் கண்ணகியையும் அழைத்துக்கொண்டு கோவலன் சென்ற நிலை மாதவியின் உள்ளத்தை மிகவும் வருத்துகின்றது. கோவலனின் குடும்ப வாழ்வு சிதைவுற்றதற்குக் காரணம் மாதவியே என மக்கள் நினைக்கின்றனர். அவள் பிறந்து வளர்ந்த பரத்தையர் குலம் இவ்வித நினைப்பிற்குப் பின்னணியாக நிற்கின்றது.

மாதவியோ காதலனைக் காணாது உளம் நொந்து உடல் மெலிந்தாள். கோவலன் பிரிவுக்கு அவளால் காரணம் காணமுடியவில்லை. அவன் இனித் தனக்கு உரியவன் அல்லன், கண்ணகிக்கே உரியவன் என்ற உண்மையினை உணர்ந்தாள். கோவலனைப் பல ஆண்டுகள் தன்னிடம் இருக்கச் செய்தது தவறே என நினைக்கிறாள். முன்பு எழுதிய கடிதத்தில் அவனை விரும்பி அழைத்த மாதவியின் உள்ளம் மாறிவிடுகின்றது. கோவலனின் பிரிவுகூட இப்பொழுது அவளை வருத்தவில்லை. ஆனால் தன் கற்பிலே நம்பிக்கையற்றுப் பிரிந்தான் என்ற உணர்ச்சியே அவளை வாட்டிற்று. உளம் கன்றி உடல் குன்றினாள்.

கோவலன், புகார் நகரினின்றும விடியுமுன் மனைவியை அழைத்துக் கொண்டு வெளியேறக் காரணம் என்ன?—என்ற வினா மாதவியின் சிந்தனையில் தோன்றிற்று. தந்தை ஏவ, தாய் சொல்ல இராமன் மனைவியுடன் நாடு துறந்து காடு நோக்கிச் சென்றான். ஆனால் இங்கோ அப்படி யாரும் கோவலனுக்கு ஆணையிடவில்லையே! ஒருவேளை தன் பிழைதான் காரணமோ என மாதவியின் உள்ளம் நினைத்தது. அப்படித்தான்

இருக்க வேண்டும் என முடிவு செய்கிருள். தனது செயலை மன்னிக்கும்படி கோவலனுக்குக் கடிதம் எழுத நினைத்தாள். கோவலன் இருக்குமிடத்தைத் தேடிக் கண்டு இக்கடிதத்தை அனுப்பி வைக்கவேண்டும் எனத் துணிந்தாள். உளம் நொந்து அவனுக்கு எழுத ஆரம்பித்தாள்.

"அடிகள் முன்னர் யர்னடி வீழ்ந்தேன்
வடியாக் கிளவி மனக்கொளல் வேண்டும்
குரவர்பணி அன்றியும் குலப்பிறப்பு ஆட்டியோடு
இரவிடைக் கழிதற்கு என்பிழைப்பு அறியாது
கையறு நெஞ்சம் கடியல் வேண்டும்
பொய்தீர் காட்சிப் புரையோய்—போற்றி!"
(புறஞ்சேரி யிருத்தகாதை-87-92)

என எழுதி முடித்தாள்.

முதல் கடிதத்தில் காதலன் என்ற உரிமை தோன்ற எழுதினுள். அவன் தன்னிடம் மீண்டும் வருதல் வேண்டும் என்ற குறிப்பு அக்கடிதத்தின் அடிநாதமாக விளங்கியது. ஆனுல் இந்த இரண்டாவது கடிதத்தின் போக்கோ முற்றிலும் மாறுபட்டதாகத் தோன்றுகின்றது. "நான் தவறு செய்திருப்பின் மன்னிக்கவேண்டும்" என்ற குறிப்பினை இக்கடிதத்தில் நாம் காண்கிருேம்.

கடிதம் எழுதி முடித்ததும் மாதவிக்கு ஓர் ஐயம் ஏற்படுகின்றது. முதல் கடிதத்தை வாங்க மறுத்த கோவலன் இதை ஏற்றுக்கொள்வான் என்று எங்ஙனம் உறுதியாக நினைக்கமுடியும்? கலையழகுடன் அமைந்து, மலர் மாலையுடன் பொதிந்த கடிதத்தையே வாங்க மறுத்துவிட்டான். திறமை மிக்க தோழி வசந்தமாலையால் கூட அவன் மனத்தை அப்போது மாற்ற முடியவில்லை. எனவே இப்போது என்ன செய்வது? எப்படியும் இக் கடிதம்

கோவலனை அடைதல் வேண்டும்; அவன் இதை வாங்கிப் படிக்கவும் வேண்டும். சிறிது சிந்தித்தாள். ஆண் பெண் 'பாலியல்' தத்துவங்களையும் உடல் கூறு நுணுக்கங்களை யும் நன்கு உணர்ந்தவள் மாதவி. எனவே எழுதிய ஓலைக்கு உறையிட்டு அதன் மேல் முத்திரையும் பொறித் தாள். அந்த மண் முத்திரையைத் தன் கூந்தலிலே பதித்து அதன் மணத்தை ஊட்டினாள். கோசிகமாணி என்ற அந்தணனை அழைத்து, எப்படியாவது கோவலனைக் கண்டு அவனிடம் இக்கடிதத்தைச் சேர்த்துவிட வேண் டும் என வேண்டினாள். கடிதத்தை அந்தணனிடம் கொடுத்து,

"கண்மணி யனையாற்குக் காட்டுக....."

(புறஞ்சேரியிறுத்தகாதை-75)

என்று மட்டிலும் கூறினாள். ஆனால் முதல் கடிதத்தை முன்பு வசந்தமாலையிடம் கொடுத்தபோது,

" கோவலற்கு அளித்துக் கொணர்க ஈங்கு"

(வேனிற்காதை-71)

என மாதவி கூறியது குறிப்பிடத் தக்கது. கோவலன் தனக்கே உரியவன் என்ற நினைப்பில் அப்போது அங்ஙனம் கூறினாள். ஆனால் இரண்டாவது கடிதத் தையோ 'காட்டுக' என்று மட்டிலும் அந்தணனிடம் வேண்டுகிறாள். மாதவியின் உயரிய பண்பும், உள்ளத் தின் செம்மையும் இவ்விரு கடிதங்களின் போக்கிலும் அவள் சொல்லிலும் அமைந்து கிடக்கின்றன.

கோவலனைத் தேடிச் சென்ற கோசிகமாணி மதுரை செல்லும் காட்டு வழியில் அவனைச் சந்திக்கிறான். செல்வமும் சிறப்பும் இழந்த காரணத்தால் கோவலன் மெலிந்து காணப்படுகிறான். அவன் உள்ளம் அமைதி

யற்றுத் தவிக்கின்றது. அமைதியை விரும்பி, காதலியையும், கவுந்தியையும் சற்றுப் பிரிந்து ஓரிடத்தில் தனிமையாகக் கோவலன் இருக்கும்போது கோசிகமாணி ஓலையுடன் வருகிறான். கோவலன் உருவம் மாறுபட்டிருந்தமையால் முதலில் அந்தணன் ஐயுற்றான்; பின்னர்த் தெளிவடைந்தான். கோவலன் பிரிவால் புகார் நகரத்து மக்கள் அடைந்த துயரினையும், மாதவியின் கையற்ற நிலையினையும் விளக்கமாகக் கூறிய அந்தணன் இறுதியில் கடிதத்தைக் கொடுக்கிறான். கோவலன இக்கடிதத்தை மறுக்கவில்லை. மறுக்க முடியவில்லை; எப்படி முடியும்?

"உடன்உறை காலத்து உரைத்தநெய் வாசம்
குருநெறிக் கூந்தல் மண்பொறி உணர்த்திக்
காட்டியது ஆதலின் கைவிடல் ஈயான்"

(புறஞ்சேரி யிருத்தகாதை 83-85)

என்று கடிதத்தைக் கோவலன் கைவிட முடியாத காரணத்தை அழகுறக் கூறுகிறார் ஆசிரியர்.

கடிதத்தைப் பெற்ற கோவலன் படித்துப் பார்க்கிறான். வருந்துகிறான். மாதவி குற்றமற்றவள் என உணர்கிறான். கடிதம் பொதுவாக அமைந்திருந்த காரணத்தால் தன் தாய் தந்தையருக்குத் தன் பெயரால இக்கடிதத்தையே அனுப்பிவிடுகிறான். மாதவி வென்றாள்; மன்னிப்புடன் மதிப்புரையும் பெற்றாள். காதலி காதலனுக்கு எழுதிய கடிதத்தை, மகன் பெற்றோருக்கு அனுப்புவதற்குத் தகுந்ததாகப் பொதுவாக அமைத்துத் தந்த இளங்கோவின் திறம் போற்றி மகிழ்தற் குரியது.

மாதவியின் முதல் கடிதத்தை வாங்க மறுத்தான் கோவலன். ஆனால் இரண்டாவது கடிதத்தை விரும்பி வாங்கி மகிழ்ந்து படித்தான். ஏதோ ஒரு ஆற்றல் அவனை அவ்வாறு செய்யும் வண்ணம் தூண்டிற்று. அதுதான்

அக் கடிதத்தில் அமைந்த மாதவியின் கூந்தல் மணம் பாலியல் (Sexual Science) தத்துவங்களை நன்குணர்ந்த அறிஞர்கள் ஓர் உண்மையினை வெளியிட்டுள்ளார்கள். "பெண்களிடம் இயற்கையாகவே ஒருவித மணம் அமைந்திருக்கின்றது. ஒரு பெண்ணைச் சந்திக்கும் போதோ, அல்லது அவளுடன் கூடும்போதோ அக்குறிப்பிட்ட வாசனையை நுகருகிறோம். பல ஆண்டுகள் கழிந்து அக்குறிப்பிட்ட மணம், தற்செயலாக, எங்கிருந்தாவது வந்தால் அம் மணத்தைப் பயன் படுத்திய பெண்ணுடன் நாம் கூடிய நிகழ்ச்சி நினைவுக்கு வரும். நம் மனம் அம் மணத்தினில் தோயும்." மாதவியின் இரண்டாவது கடிதத்தை வாங்கிப் படித்த கோவலனின் செயலுக்குப் பாலியல் அறிஞரின் இக் கூற்று சான்று பகர்வது போல இருக்கின்றது.

# இரு கனவுகள்

கனவு காண்பது மனித இயற்கை. நினைவும் நிறை வேருத ஆசைகளுமே கனவின் காரணம் எனச் சிலர் கூறுகின்றனர். காரணம் எதுவாயினும் ஆகுக—உள நூல் அறிஞரின் ஆராய்ச்சிக்கு விட்டுவிடுவோம். கனவு களில் இன்பக் கனவுகளும் உண்டு; துன்பக் கனவுகளும் உண்டு. நடந்த நிகழ்ச்சிகளும் கனவாகலாம். மனித வாழ்வில் இயற்கையாக நிகழும் இக்கனவு நிகழ்ச்சிகளை இலக்கிய ஆசிரியர்களும் பயன்படுத்திக்கொள்கிருர்கள். இலக்கிய உலகிலே தங்களால் உருவாக்கப்பட்டு விளை யாடவிட்ட பாத்திரங்களைக் கனவு காணும்படி செய் கிருர்கள். அதன் மூலம் படிப்போர் உள்ளத்தில் சில உணர்ச்சிகளையும், உள்ளுணர்வுகளையும் உண்டாக்கு கிருர்கள். இத்தகைய இலக்கியக் கனவுகள் இரண் டினைப் பார்ப்போம்.

காலத்தாலும், மொழியாலும், பண்பாட்டாலும் ஒற்று மைப்படாத வெவ்வேறு இலக்கிய ஆசிரியர்களால் தோற்றுவிக்கப்பட்ட இரு கனவுகளை நாம் இப்போது காணப்போகிருேம். அவற்றுள் சில ஒருமைப்பாடு களும் உள. இரண்டும் இரு துன்பியல் நாடகங்களிலே வருகின்றன. இரண்டிலும் பெண்களே தத்தம் கண வரைக் குறித்து அக்கனவுகளைக் காண்கின்றனர். ஒரு கனவு சிலப்பதிகாரத்தில் கண்ணகி மூலம் தோன்று கின்றது. மற்ருென்று 'ஜூலியஸ் சீசர்' நாடகத்தில் சீசரின் மனைவி கல்பூர்னியா மூலம் காட்சி தருகின்றது. இவற்றின் தன்மைகளை விரிவாகக் காணின் இரு கனவு களின் திறமும் புலப்படும்.

சிலப்பதிகாரக் கதையினை அனைவரும் அறிவர். கட்டிய மனைவி கண்ணகியுடன் சில ஆண்டுகள் வாழ்கிறான் கோவலன். இவர்கள் வாழ்வில் மாதவி குறுக்கிடுகின்றாள். மாதவியின் மையலில் கோவலன் மயங்கிவிடுகிறான். கண்ணகியைப் பிரிகிறான். மாதவியின் அன்பு நிழலில் பல ஆண்டுகள் தங்கிவிடுகிறான். உற்றார் உறவினரையெல்லாம் மறந்து காலங்கழிக்கிறான். ஆனால் அங்கும் கோவலனால் நிலைத்து வாழ முடியவில்லை. 'கானல் வரி' வடிவில் விதி விளையாடுகின்றது. மாதவியிடம் ஊடல் கொள்கிறான். ஊடல் பிணக்காகிப் பின்னர் வெறுப்பாகிவிடுகின்றது. பல ஆண்டுகள் உள்ளம் ஒன்றிப் பழகிய மாதவியைப் பிரிகிறான் கோவலன்.

மாதவியை விட்டுப் பிரிந்த கோவலனுக்கு இப்போது கண்ணகியின் நினைவு வருகின்றது. கண்ணகியோ என்றாவது கணவன் வருவான் என்ற நம்பிக்கையில் காத்திருக்கிறாள். பல ஆண்டுகள் ஆற்றியிருந்த அவள் உள்ளம் அன்று—அதாவது மாதவியோடு ஊடல் கொண்டு கோவலன் திரும்பி வரக் கூடிய அந்த நாளில்—மிகவும் வேதனைப்படுகின்றது. முதல் நாள் தான் கண்ட கனவு அவள் நெஞ்சை வருத்துகின்றது. அத்தீக்கனா அவள் உள்ளத்தைத் தீய்க்கின்றது. நினைக்கவே அஞ்சும் அக்கனவை மீண்டும் நினைத்துப் பார்க்கிறாள். "கணவன் திரும்பி வருகிறான். தன்னை அழைத்துக் கொண்டு வேற்றூர் செல்கிறான். அங்கு அவன்மேல் கொடிய குற்றம் ஒன்று சாட்டப்படுகின்றது; இதனால் அவனுக்குத் தீங்கும் ஏற்படுகின்றது. இதை அறிந்து மன்னனைக் கண்டு வழக்காடி வெற்றி கொள்கிறாள். மன்னனுக்கும் நகருக்கும் தீங்குண்டாகின்றது" என்று தான் கண்ட தீக்கனா கண்ணகியின் மனத்திலே தோன்றித் தோன்றி

மறைகின்றது. தன் தோழி தேவந்தியிடமும், இக் கனவினைச் சொல்கிருள்.

‘‘ கடுக்கும் என் நெஞ்சம் கனவினுல் என்னை
பிடித்தனன் போயோர் பெரும்பதியுள் பட்டேம்
பட்ட பதியில் படாத தொரு வார்த்தை
இட்டனர் ஊரார் இடுதேளிட்டு என்றன்மேல்
கோவலற்கு உற்றதோர் தீங்கு என்றது கேட்டுக்
காவலன் முன்னர்யான் கட்டுரைத்தேன் ; காவலனேடு
ஊர்க்குற்ற தீங்கும் ஒன்று உண்டால்.........’’

(கனுத்திற முரைத்த காதை, 45-51)

என்று கூறி வேதனைப்படுகிருள் கண்ணகி. இதன் விளைவு என்ன ஆகுமோ என அஞ்சுகிருள். ஆனல் அவ்வேளை கோவலன், பல ஆண்டு பிரிவிற்குப் பின் நாணி வருந்தி அங்கு வருகிருன். கண்ணகி அவன். வரவை விரும்பினுலும் அப்போது எதிர்பார்க்கவில்லை, ஒரே திகைப்பும் குழப்பமும் அவளுக்கு ஏற்படுகின்றது. செய்வதறியாது திகைத்து மகிழ்கிருள். கண்ட கனவினை யும் மறந்து விடுகிருள்.

தமிழணங்கின் கனவினைக் கண்ட நாம் கிரேக்கப் பெண்ணின் கனவையும் காண்போம். கிரேக்க நாட்டு வீர மன்னன் ‘ஜூலியஸ் சீசர்; ஆண்மையாளன். இவன் பெற்ற வெற்றி தோல்விகளையும் அவலமுடிவையும் சித்திரிப்பதுதான் ‘ஜூலியஸ் சீசர்’ என்ற ஆங்கில நாடகம். பதினுரும் நூற்ருண்டின் தலை சிறந்த ஆங்கிலக் கவியான உலகமேதை ·சேக்ஷ்பியரால் எழுதப்பட்டது இந்த நாடகம். சீசரின் அன்பு மனைவியே ‘கல்பூர்னியா’’ கண்ணகி கண்டதைப் போலவே இவளும் தன் கணவனைக் குறித்துத் தீய கனவொன்று காண்கிருள். கண்ட கனவு அவளை அச்சுறுத்துகின்றது. இரவெல்லாம் அஞ்சி அஞ்சி அலறுகிருள். ‘‘ஆண்மையாளனுகிய

சீசரின் உடலெங்கும் இரத்தம் பெருக்கெடுத்து வடிகின்றது. ஆரவாரிக்கும் ரோமர்கள் அக்குருதியிலே தங்கள் கைகளைத் தோய்த்து மகிழ்கிறார்கள்''—என்று தான் கண்ட தீய கனவு அவள் உள்ளத்திலே நிழலிடு கின்றது. இதனால் தன் கணவன் சீசருக்குத் தீங்கு நேரிடும் என அஞ்சுகிறாள். இரவு கழிந்தது; விடியல் பிறந்தது. சீசர் வழக்கம் போல 'செனட்' சபைக்குப் புறப்படுகிறான். இதை அறிந்த கல்பூர்னியா ஓடோடி வருகிறாள். போகவேண்டாம் எனத் தடுக்கிறாள். அஞ்சாமையுடைய சீசர் இதற்கெல்லாம் அஞ்சவில்லை. கல்பூர்னியா கதறினாள்; காலில் விழுந்தாள்; தான் கண்ட கனவையும் கூறினாள். சீசருக்குச் சிறிது மனமாற்றம் ஏற்படுகின்றது. ஆனால் அவ்வேளை 'தெஸியஸ்' வருகிறான்—கூற்றத் தூதுவனாக. கல்பூர்னியா கண்ட கனவிற்கு அவன் நற்பலன் கூறுகிறான். விதி விளையாடு கின்றது. சீசரின் அறிவில் துணிவு பிறக்கின்றது. செனட்டுக்குப் புறப்படுகிறான். கல்பூர்னியா கெஞ்சி அழுதும் பலனில்லை. செனட் சபையில் சூழ்ச்சியால் கொல்லப்படுகிறான் சீசர். அஞ்சாமை பெற்ற வாழ்வும் முடிவடைகின்றது. கல்பூர்னியா இறுதிவரை தடுத்தும் விதி வெல்கின்றது.

ஆனால் கண்ணகியோ, கல்பூர்னியா போலத் தன் கடமையினைச் செய்யவில்லையே! மதுரைக்குப் போகாமல் தடுத்து நிறுத்தியிருக்கலாம்—செய்தாளா? தான் கண்ட தீக் கனவைக் குறிப்பாகவேனும் கணவனிடம் கூறியிருக் கலாம்—அதுவும் செய்யவில்லையே! கோவலன் மீண்டும் தன்னிடம் வந்து வேற்றூருக்கு அழைத்துக்கொண்டு போவதாகக் கண்ட கனவின் முற்பகுதி அப்படியே பலித்து விடுகின்றது. பிற்பகுதியும் பலித்துவிட்டால் என்ன செய்வது, என்ற உணர்வு ஏன் அவள் உள்ளத்தில்

எழவில்லை என்பன போன்ற வினாக்கள் நம்முள் எழுவது இயல்பே. இங்குதான் நாம் ஓர் உண்மையினை உணர்தல் வேண்டும். மேல் நாட்டுப் பண்பாடு வேறு; நமது பண் பாடு வேறு. நமது பெண்கள், கணவனுக்குத் திங்கு ஏற் படுவது போன்ற குறிப்பினைக் கனவில் காணின் அதை நினைக்கவே அஞ்சுவர்; மறக்கவே முயல்வர். கற்புடைய பெண்கள் ''உரையார் இழித்தக்க காணிற் கனா'' என்று பழமொழி பேசுகின்றது. உயிர்த் தோழியாம் தேவந்தி யிடமே கனவைத் தெளிவாகச் சொல்வதற்கு அஞ்சும் கண்ணகி கணவனிடம் எங்ஙனம் சொல்லமுடியும்? மணமாகிச் சில ஆண்டுகளே கண்ணகி கணவனுடன் வாழ்ந்திருக்கிறாள். பின்னர்ப் பல ஆண்டுகள் அவனைப் பிரிந்து வாழவேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது. 'கணவன் வரமாட்டானா' என்ற ஏக்கத்துடனேயே காலத்தைக் கழிக்கிறாள். இந் நிலையில், எதிர்பாராத சூழ்நிலையில், வீடு நோக்கி வந்த கணவனைக் காண்கிறாள். கண்ட வியப்பில் தன் கனவினையும் மறக்கிறாள். 'கணவன் திரும்பிவருவான்' என்ற கனவின் முற்பகுதி பலித்து விட்டதே என்பதைக் கூட, அப்போதைய சூழ்நிலையில், அவளால் உணர முடியவில்லை. 'மதுரைக்குப் புறப்படு' என்று கணவன் சொன்னவுடன் புறப்படுகிறாள். அஞ்சி அஞ்சி வாழ்ந்த கண்ணகியிடம் உரிமையுணர்வு மறைந்து விடுகின்றது. கணவனைக் கண்ட 'அதிர்ச்சி'யே கனவை மறந்ததன் காரணம்.

ஆனால் கல்பூர்னியாவின் நிலை வேறு; மேலைப் பண் பாட்டின் பழக்க வழக்கங்களில் படிந்து தோய்ந்த உள்ளம் அவளுடையது; கணவன் சீசருடன் பழகி உணர்ந்து வாழ்ந்தவள். அஞ்சாமையில் வளர்ந்தவள். எனவே கணவனிடன் தான் கண்ட தீக்கனவைக் கூறித் தடுக்கிறாள்.

கல்பூர்னியா—கண்ணகி இருவராலுமே விதியை வெல்ல முடியவில்லை. சீசரின் கொலையும் கோவலன் கொலையும் நடந்தேவிடுகின்றன. கணவனோடு இன்ப வாழ்வு வாழலாம் என வாயூறி மதுரை வந்த கண்ணகிக்கு மீண்டும் 'அதிர்ச்சி' ஏற்படுகின்றது. முன்பு கணவனைக் கண்டதால் ஏற்பட்ட 'அதிர்ச்சி' கனவை மறக்கடித்தது. இப்போது ஏற்பட்ட 'அதிர்ச்சியோ' மறந்த கனவை நினைப்பூட்டுகின்றது. எதிர் பாராத நிகழ்ச்சிகளால் நினைவு மறைவதும், தோன்றுவதும் இயல்பு. கணவன் அருகில் இருக்கும்போதெல்லாம் நினைவுக்கு வாராத அக்கனவினை இப்போது நினைத்துப் பார்க்கிறாள். கண்ட கனவில் பாதிக்குமேல் பலித்து விட்டதை உணருகிறாள். எஞ்சிய கனவையும் உறுதியாக்க வேண்டும் என்ற உணர்வு அவள் உள்ளத்தில் எழுகின்றது.

"என்றாள் எழுந்தாள் இடருற்ற தீக்கனா
நின்றாள் நினைந்தாள் நெடுங்கயற்கண் நீர்சோர
நின்றாள் நினைந்தாள் நெடுங்கயற்கண் நீர்துடையாச்
சென்றாள் அரசன் செழுங்கோயில் வாயில்முன்"

(ஊர்சூழ்வரி, 72-75)

என்று விளக்குகிறார் இளங்கோவடிகள். 'தீவேந்தன் தனைக்கண்டு இத்திறங் கேட்பேன்' என்று கொதித்து எழுகிறாள். கண்ட கனவு உள்ளத்தில் வெறியேற்றுகின்றது. பெருக்கெடுத்தோடும் கண்ணீரோடு மன்னவை சென்ற கண்ணகி வழக்கிலே வெற்றிபெறுகிறாள்.

இதுவரை இரு கனவுகளைப்பற்றிப் பார்த்தோம். ஒன்று கல்பூர்னியா கண்டது. மற்றது கண்ணகி கண்டது. கல்பூர்னியா கணவனிடம் கனவைச் சொல்லி அதன்மூலம் கடமை முடிந்துவிட்டதாக நினைக்கிறாள். கண்ணகியோ கணவனைக்கண்ட 'அதிர்ச்சி—மகிழ்வில்'

கனவையே மறந்துவிடுகிருள். இறுதியில் ஏற்பட்ட 'கொலே—அதிர்ச்சியால்' மறந்த கனவு நினைவுக்கு வருகின்றது. அப்போது நினைத்து ஏங்குகிருள்; அழுகிருள். எஞ்சிய கனவின் பலனையும் முடித்து வைக்கிருள். ஆனல் கண்ணகி—கல்பூர்னியா இருவராலுமே தம் கணவரைக் காப்பாற்ற முடியவில்லை. விதியின் கை மேலோங்கிவிடுகின்றது. இந்நிகழ்ச்சிகளைக் காணும்போது,

' எழுதிச் செல்லும் விதியின்கை
எழுதி எழுதி மேற்செல்லும் ;
தொழுது கெஞ்சி நின்ருலும்,
சூழ்ச்சி பலவும் செய்தாலும்,
வழுவிப் பின்னுய் நீங்கியொரு
வார்த்தை யேனும் மாற்றிடுமோ?
அழுத கண்ணீர் ஆறெல்லாம்
அதிலோர் எழுத்தை அழித்திடுமோ?''

('கவிமணி'யின்-உமார் கய்யாம், 53)

என்ற பாரசீகக் கவிஞரின் அற்புதமான பாடல்தான் நம் நினைவிற்கு வருகின்றது.

# கவுந்தி அடிகள்

சிலம்பின் ஒலியிலே பிறந்த பல பாத்திரங்களுள் கவுந்தி அடிகள் என்னும் சமணப் பெண் துறவியும் ஒருவர். கோவலன் கண்ணகி இவர்களின் வாழ்வில் புயல் வீசித் துன்பம் தொடரும்போது கவுந்தியின் தொடர்பும் கிடைக்கின்றது. அத்துன்பம் உச்சநிலை அடையும்போது அடிகளின் தொடர்பும் அற்றுவிடுகின்றது. இந்த இடைவேளையில் தோன்றி மறையும் கவுந்தி அடிகளை எந்த நோக்கத்தோடு ஆசிரியர் அமைத்துள்ளார் என ஆய்வது அறிவுக்கு விருந்து தருவதாகும்.

இளங்கோ சமணர்; தம் சமய உண்மைகளை அழியாத தம் காவியத்தில் ஆங்காங்கே வலியுறுத்த வேண்டும் என்ற கருத்தில் கவுந்தி அடிகள் என்ற சமணத்துறவியைக் கதையுடன் இணைத்து வைக்கிறார். சமயம் ஏற்பட்டபோதெல்லாம் சமண உண்மைகளைக் கவுந்தி பேசியும் வருகிறார். எனவே சமணத்தைப் பரப்பும் பாத்திரமாகவே கவுந்தியை இளங்கோ பயன்படுத்துகிறார். வேறு சிறப்பு அவருக்குக் கிடையாது'— என அறிஞர் சிலர் கருதுவர். இக்கருத்திலும் உண்மை இருக்கத்தான் செய்கின்றது. ஆனால் இதை விடுத்து நாடகக் கண்கொண்டு சிலம்பினைப் பார்ப்போமானால் கவுந்தி அடிகளின் இன்றியமையாமை நமக்குப் புலனாகும்.

கவுந்தியின் தொடர்பு கதைக்குத் தேவையா? அடிகளின் தொடர்பால் கதைப்போக்கில் ஏதாவது மாற்றம் ஏற்படுகின்றதா? என்னென்ன சிக்கல்களைத் தோற்றுவிக்கிறார்? இவர் இல்லாவிடில் கதை நிகழ்ச்சி

எவ்வாறு மாற்றம் அடைந்திருக்கும் என்பனபோன்ற வினுக்கள் நம்முள் எழுவது இயல்பே.

கோவலன் மாதவியை "மாயப் பொய் பல கூட்டும் மாயத்தாள்" என வெறுத் தொதுக்கி வறியனுய்க் கண்ணகியிடம் வருகிருன். கண்ணகி 'நலங்கேழ் முறுவல் நகைமுகங்காட்டி' வரவேற்றுத் தன் சிலம்பினைத் தருகிருள். இச் சிலம்பை முதலாக வைத்து, தீது தீர் சிறப்பின் தென்னவன் நன்னுட்டு யாட மதுரைக்குச் சென்று, வாணிபம் செய்து மானத்தோடு வாழ விரும்பினுன் கோவலன். இவ்விருப்புடன் காதலர் இருவரும் காவிரிப் பூம் பட்டினத்தை விடுத்து மதுரைக்குப் புறப்படுகின்றனர். விதியும் இவர்களுக்குத் துணையாகச் செல்கின்றது.

கோவலனும் கண்ணகியும் மதுரை செல்லும் வழியிலுள்ள பொழில் ஒன்றில் கவுந்தியடிகளைக் கண்டனர்; தொழுதனர்; கவுந்தி, காதலரை அன்புடன் நோக்குகிருர். தமக்கும் மதுரைக்குச் செல்லும் விருப்பம் பல நாட்களாகவே உண்டு என்றும், எனவே தாமும் உடன் வருவதாகக் கூறுகிருர்.

"தென்தமிழ் நன்னுட்டுத் தீதுநீர் மதுரைக்கு
ஒன்றிய உள்ளம் உடையேன் ஆகலின்
போதுவல் யானும் போதுமின்........"
(நாடுகாண்காதை 58-60)

என்பது கவுந்தி கூற்று. இவ்வாறு கோவலன் கண்ணகி இவர்களின் துன்ப வாழ்வில் தாமாகவே வலிய வந்து பங்கு கொள்கிருர் கவுந்தி.

கவுந்தியின் தொடர்பால் கண்ணகிக்கு நல்ல துணை கிடைத்துவிட்டது என மகிழ்ந்து "தொடிவளைத் தோளி துயர் தீர்த்தேன்(10:63)" எனச் செம்மாந்து கூறி

இன்பமடைகிருன் கோவலன். அவனுக்குத் தெரியாமல் அவனோடு வரும் விதியும் மகிழ்கின்றது. போராட்டத்தின் முதல் வெற்றி விதிக்குக் கிடைத்துவிட்டது. இனித் தன் செயலினைக் கவுந்தி ஆற்றுவார் என மகிழ்கின்றது விதி. 'ஒரு துறவியின் துணை கிடைத்துவிட்டது; இனிக் காதலர் வாழ்வு சிறந்து விளங்கும்' என நமது உள்ளமும் நினைக்கின்றது. ஆனல் எவ்வளவு தூரம் கவுந்தியின் தொடர்பு கோவலனுக்கு நன்மையாக முடிகின்றது என்று பார்ப்போம்.

காதலர் இருவரும் கவுந்தியுடன் வழி நடக்கின்றனர். பல காட்சிகளைக் கண்டு மகிழ்ந்து சோர்வை மறக்கின்றனர். வழியில் வானத்தில் உலவும் சாரணரைக் கவுந்தி சந்திக்கிருர். செயற்கரிய செய்யும் தெய்வீக ஆற்றல் பெற்றவர்கள் இவர்கள். முக்கால உணர்ச்சி பெற்றுத் திகழும் இச் சாரணப் பெரியோரைக் கண்டவுடன் கவுந்தியும், காதலரும் 'காலுற வீழ்ந்து' வணங்குகின்றனர். கோவலன் கண்ணகி இவர்கட்கு இனி வரவிருக்கும் இன்னல்களைத் தம் தெய்வீக ஆற்றலால் சாரணர் அறிகின்றனர்; இதைக் கவுந்தியிடம் குறிப்பாக அறிவிக்கின்றனர்.

"கழிபெருஞ் சிறப்பிற் கவுந்தி காணுய்
ஒழிகென ஒழியாது ஊட்டும் வல்வினை;
இட்ட வித்தின் எதிர்த்து வந்து எய்தி
ஒட்டுங்கால் ஒழிக்கவும் ஒண்ணு"

(நாடுகாண் காதை, 170-173)

என்பது சாரணர் கூற்று. "கவுந்தி! இதோ தீவினை வந்து நிற்பதைப் பார்ப்பாயாக" என்று சாரணர்கூற காதலருக்கு ஏதோ கொடிய துன்பம் ஒன்று வரப் போவதை உணர்கிருர் கவுந்தி. இச் செய்தியினைக் கோவலனிடம்கூறி வரவிருக்கும் இன்னல்களைத் தடுக்கக்

கவுந்தி வழி செய்வார் என நாம் எதிர்பார்க்கிறோம். ஆனால் அடிகளோ அமைதியாக இருந்துவிடுகிறார். குறிப்பாகவேனும் கோவலனிடம் இதுபற்றிக் கூறாதது நமக்கு ஏமாற்றத்தைத் தருகின்றது. கவுந்தி வடிவில் விதி செயலாற்றும்போது யாரால் என்னசெய்ய இயலும்?

சாரணர் அருள்பெற்ற மூவரும் தங்கள் வழி நடையைத் தொடங்கினர். வழியில் மறையவன் ஒருவனைச் சந்திக்கின்றனர். அவனுடைய வரலாறு, ஊர் முதலியவற்றைக் கேட்டறிந்தபின் மதுரை செல்லும் வழியினைக் கேட்கிறான் கோவலன். மறையவன் மூன்று வழிகள் உண்டு என்றுகூறி ஒவ்வொன்றின் இயல் பினையும் விளக்கமாகக் கூறுகிறான். இதனைச் சுருக்கமாக அறிவது நல்லது.

கொடும்பாளூர், நெடுங்குளம் என இரண்டுஊர்; இவை இரண்டிற்கும் பொதுவான ஓர் ஏரி; இதன் கரையினைக் கடந்து சென்றால் மூன்று வழிகள் பிரியும்; இவை மூன்றுமே மதுரை செல்லும் வழிகள்தாம். வலப் பக்க வழியில் சென்றால் முதலில் கொடிய காடும், இதை அடுத்துப் பாலைநிலமும் அதன்பின் செழிப்பும் செம்மையும் மிக்க தென்னவன் சிறுமலையும் சிறந்து தோன்றும். இம்மலையை வலமாகக்கொண்டு செல்லின் மதுரையை அடையலாம். அல்லது இடப்பக்க வழியிலும் செல்லலாம். இவ்வழியில் பொலிவுடன் விளங்கும் பல பூங்காக்களைக் கடந்து சென்றால் திருமால்குன்றம் என்ற தெய்வீக மலையினைக் காணலாம். அதில் ஒரு குகை; அதைக் கடந்தால் மூன்று குளங்கள் தோன்றும். புண்ணிய சரவணம், பவகாரணி, இட்டசித்தி—என்பன இவற்றின் பெயர். முதல் குளத்தில் நீராடினால் இந்திரன் எழுதிய 'ஐந்திரவியாகரணம்' என்னும் இலக்கணத்தை உணரலாம்; பவகாரணியில் மூழ்கினால் பழம்பிறப்பின்

உண்மை தெரியவரும்; இட்டசித்தியில் மூழ்க, நினைத்த வெல்லாம் நினைத்தபடியே நடைபெறும். இக் குளங் களில் மூழ்குவதற்கு முன்னால் சில சோதனைகள் நடைபெறும். இதில் வெற்றிபெற்றால்தான் இக்குளங் களில் மூழ்கமுடியும். அதன்பின் மதுரை செல்லலாம். வலம் இடமாகிய இவ்விரண்டு வழியுமின்றி நேர் வழியிலும் செல்லலாம். இவ்வழியிலுள்ள ஊரும் காடும் கடந்து சென்றால் கடக்க முடியாத பெருவழியொன்று தோன்றும். இங்கு மயக்கும் தெய்வம் ஒன்று தோன்றி வழிச் செல்வோர் போக்கினைத் தடுக்கும். இத் தடையினை நீக்கி மதுரையை அடையலாம். இவ்வாறு மதுரை செல்லும் மூன்று பாதைகளின் நன்மை தின்மைகளைச் சொல்லி ஏதாவது ஒன்றில் செல்லுமாறு கோவலனிடம் மறையவன் கூறுகிறான்.

மறையவன் பேச்சை அமைதியாகக் கேட்டுக்கொண் டிருந்த கவுந்தி இப்போது பேச ஆரம்பிக்கிறார். தமது துன்பத்தையும் கவனியாது வழிகூறிய மறையவனைக் கண்டிப்பது போல அப்பேச்சு அமைந்திருக்கின்றது. இறுதியில் மறையவனை நோக்கி,

''காமுறு தெய்வம் கண்டடி பணிய
நீபோ, யாங்களும் நீள்நெறிப் படர்குதும்''

(காடுகாண்காதை, 160-161)

என்று சீற்றத்துடன் கூறுகிறார் கவுந்தி. கோவலன் வழி கேட்டான்; மறையவன் வழி சொன்னான். இதில் கவுந்தி ஏன் தலையிட வேண்டும்? அமைதியாகவாவது பதில் சொன்னாரா? அதுவுமில்லை. சோர்ந்த உள்ளத் துடன் மறையவன் சென்றுவிடுகிறான். பின்னர் மூன்றா வது சொன்ன நேர் வழியில் காதலர் இருவரையும் அழைத்துக்கொண்டு கவுந்தி செல்கிறார். மறையவன்

சொன்னது போலவே மயக்குந் தெய்வம் வருகின்றது. போக்கைத் தடுக்கின்றது. அவ்வேளை 'பாய் கலைப் பாவை' யின் மந்திரம் ஒன்றைக் கோவலன் கூற அது விலகி மறைந்துவிடுகின்றது. இங்கு மறையவன் கூற்று உண்மையாகின்றது. ஏனைய இரண்டு வழிகளைப்பற்றி யும் மறையவன் கூறியது உண்மையாகத்தான் இருக்க வேண்டும் என நமது உள்ளம் நினைக்கின்றது. இடப் பக்க வழியாகச் சென்று பவகாரணி, இட்ட சித்தி ஆகிய குளங்களில் மூழ்கிப் பழம்பிறப்பினை உணர்ந்து, துன்ப மின்றிக் கோவலன் வாழ்ந்திருக்கலாமே—என நினைந்து நமது நெஞ்சம் வருந்துகின்றது.

பொதுவாகக் கவலையுள் ளைந்திருப்பவர்கள் தாம் குறிகேட்டு, சோதிடம் பார்ப்பது வழக்கம். எதிர்காலம் பற்றியும், பழம் பிறப்புப்பற்றியும் அறிய இவர்களுக்கு ஆசை அதிகம் இருக்கும். நமது கோவலனே இப்போது குன்றனைய பெரும் பொருளைத் தொலைந்து வறியனாய், வாழ வகையின்றி வந்திருக்கிறான். இந்த நிலையில் இரண்டு குளங்களைக் காட்டி 'ஒன்றில் மூழ்கினால் உனது பழம் பிறப்பினை உணர்வாய்; மற்றொன்றில் மூழ்கினால் நீ நினைத்த காரியங்கள் அனைத்தும் கை கூடும்' என்று ஒருவன் சொன்னால் அட்டியின்றி இவைகளில் மூழ்கி விடுவான் கோவலன். கவுந்தி யில்லாமல் வந்திருந்தால் கோவலன் இடப் பக்க வழியில் சென்று மேலே குறிப் பிட்ட குளங்களில் மூழ்கிப் புத்தாற்றல் பெற்றிருப்பான். ஆனால் என்ன செய்வது? கோவலன் விருப்பத்திற்குக் கவுந்தி இடங் கொடுக்கவில்லை. அவசர அவசரமாக இடைப்பட்ட வழியில் அழைத்துச் சென்றுவிடுகிறார். கவுந்தி வடிவில் விதி விளையாடுகின்றது. இதற்குப் பணிவதைத் தவிர வேறு வழியில்லை கோவலனுக்கு.

இறுதியாக மூவரும் மதுரையின் புறத்தேயுள்ள புறஞ்சேரிக்கு வந்து சேர்கின்றனர். அங்கு அறவோர் தங்கும் ஓர் இடத்தில் தங்கியிருக்கின்றனர். அவ்வேளை கோவலன் மனமோ அமைதியுற்றுத் தவிக்கின்றது. முதல் நாள் நள்ளிருள் யாமத்தில் தான் கண்ட தீக் கனவு அவன் உள்ளத்தை வாட்டுகின்றது. 'மதுரை நகரில் கீழ்மகன் ஒருவனுல் கண்ணகி கலங்கித் துயரமடைவதாகவும், தன் ஆடை பிறரால் கவரப்படுவதாகவும், தான் ஓர் எருமையின்மேல் ஏறிச் செல்வதாகவும், பின்னர்க் கண்ணகியுடன் விண்ணுலகம் அடைவதாகவும் தான் கண்ட கனவு இப்போது கோவலன் நினைவிற்கு வருகின்றது. இக்கனவினுல் என்ன நிகழுமோ எனக் கோவலன் அஞ்சுகிருன். கவுந்தி அடிகளிடம் இக்கனவினைச் சொல்லி அவர் கூறும் ஆறுதல் மொழியால் தன் கவலையினை மறக்கலாம் என நினைத்து அடிகளிடம் கனவைக் கூறுகிருன். ஆனுல் அடிகளோ எவ்வித அமைதியும், ஆறுதலும் கூறவில்லை. மதுரை நகரினுள் கோவலனை அனுப்பிவிடுதல் வேண்டும் என்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருக்கிருர் கவுந்தி அடிகள்.

"காதலி தன்னெடு கதிர்செல் வதன்முன்
மாட மதுரை மாநகர் புகு........"

(அடைக்கலக்காதை, 111-112)

என கவுந்தி அடிகள், கோவலன் கூறிய கனவையும் நினையாமல், கட்டளையிடுவதை நினைத்து நமது உள்ளம் வேதனைப்படுகின்றது. இக்கனவை நினைந்தாவது மதுரையினுள் செல்லாமல் இருந்திருக்கலாமே என நாம் நினைக்கிருேம்.

இவ்வேளை அங்கு மாதரி என்னும் ஆயர் முதுமகள் வருகிருள், கவுந்தியிடம் பக்தியும், பாசமும் கொண்டவள். ஆவினைக் காத்து ஓம்பி அதன் பயனை உலகுக்கு அளிக்

கும் கொடும்பாடில்லாத கோவலர் குடியினைச் சேர்ந்தவள் மாதரி என்ற காரணத்தால், கற்புக்கடம் பூண்ட பொற்புடைத் தெய்வமாகிய கண்ணகியை அந்த இடைக்குல மடந்தையிடம் அடைக்கலமாகத் தருகிறார் அடிகள். அடைக்கலத்தின் சிறப்புப் பற்றியும் கவுந்தி பலபடப் பேசுகிறார். இத்துடன் கவுந்தியின் தொடர்பும் கதை நிகழ்ச்சியினின்றும் அற்றுவிடுகின்றது. அவர் மேற்கொண்ட பணியும் முடிந்துவிடுகின்றது. இதன்பின் மதுரையில் நடந்த அவல நிகழ்ச்சியினை அனைவரும் அறிவர்.

இதுவரை நாம் ஆய்ந்த நிகழ்ச்சிகளிலிருந்து கவுந்தியடிகளின் பணி குறித்து ஒரு முடிவுக்கு வரலாம். நிலையில்லாத உள்ளமுடையவன் கோவலன். இவ்வித நிலையுள்ள கோவலன் மதுரைக்கு வந்து சேரவேண்டும்; கொலையும் நடக்க வேண்டும்—எப்படி முடியும்? எனவே கவுந்தியடிகளைக் கதையுடன் இணைக்கிறார் இளங்கோ. தம்பணியினைத் திறம்படச் செய்து முடிக்கிறார் கவுந்தி. கோவலனை மதுரை மாநகரில் கொண்டுவந்து சேர்ப்பதுடன் அடிகளின் பணி முடிந்துவிடவில்லை. இதற்கெல்லாம் மேலாக, சிகரம் வைத்தது போல ஒரு பணி இருக்கின்றது. அதுதான் கண்ணகியைக் கோவலனிடமிருந்து பிரித்து ஆயர்பாடியிலே தங்கச் செய்வது. இதையும் வியத்தகு முறையில் செய்து முடிக்கிறார் கவுந்தி அடிகள்.

கோவலன் கண்ணகி இவர்கள் வாழ்வில் கவுந்தி அடிகள் பங்கு கொள்ளாவிடில் கதை நிகழ்ச்சியே வேறு விதமாக மாற்றம் அடைந்திருக்கும். அடிகள் இல்லாவிடில் கோவலனும் கண்ணகியும் மதுரை வரை வந்திருப்பார்களா என்ற ஐயமும் எழுகின்றது. வந்து சேர்ந்தாலும் கண்ணகியையும் அழைத்துக்கொண்டுதான்

சிலம்பு விற்கப் போயிருப்பான். வேறுவழி அவனுக்குக் கிடையாது. அப்போது கோவலனின் கொலை கண்ணகியால் தடைப்பட்டிருக்கும்.

எனவே உள்ள உறுதியற்ற கோவலனையும் கண்ணகியையும் மதுரை வரை கொண்டு வந்து சேர்ப்பதற்காகவும், பின்னர்க் கண்ணகியை அடைக்கலம் கொடுப்பதன் மூலம் பிரிப்பதற்காகவும், கோவலனைக் கொலைக் களத்தை நோக்கி இழுத்துச் செல்வதற்காகவும் கவுந்தி அடிகளை இளங்கோ படைத்து இணைத்துள்ளார் என்று கொள்ளலா மல்லவா?

## "நாவல் அந்தணன்"

செந்தமிழ் நூலாகிய சிலப்பதிகாரம் தமிழிலக்கிய உலகின் முதல் காப்பியமாகும். பல்வேறுபட்ட உணர்ச்சி மோதல்களை இக்காப்பியத்தில் நாம் காண்கிறோம். கற்புக் கடம்பூண்ட கண்ணகி, குன்றாக் கொள்கைக் கோவலன், ஆடலழகி மாதவி, புண்ணிய முதல்வி கவுந்தி, கொடும் பாடில்லாக் கோவலர் குடிப்பிறந்த மாதவி, மாமறையோன் மாடலன், சுடுமண் ஏரு வடுநீங்கு சிறப்பின் மதுரை முதல்வனும் நெடுஞ்செழியன், கோப்பெருந்தேவி, வட வரை வணக்கிய செங்குட்டுவன், தெய்வத்தைக் கணவனாகப் பெற்ற தேவந்தி, விலங்கு நடைச் செல வுடைப் பொற் கொல்லன்—இவ்வாறு உள்ளுணர்வால் வேறுபடும் உறுப்பினர்களால் உருவானதுதான் சிலப்பதிகாரம். இக் கதையில் முதலில் தோன்றி இடையில் மறையும் உறுப்பினர் சிலர்; இடையில் தோன்றி கடையில் மறைபவர் பலர்; தொடக்கம் முதல் இறுதிவரை வருபவரும் உளர். எல்லா உறுப்பி னருமே இக்காப்பிய மாளிகையின் வளர்ச்சிக்கு உற்ற துணை புரிகின்றனர். என்றாலும் காப்பியத்தின் போக்கை மாற்றக் கூடிய வகையில் அதன் வளர்ச்சிக் குத் துணை புரிந்து, ஆணிக்கல்லாகத் திகழும் உறுப்பின ரும் சிலர் உளர். அவ்வகை உறுப்பினருள் மாடலன் என்ற 'நாவலந்தணனும்' ஒருவன். இவனது தொடர்பால் ஏற்படக் கூடிய காப்பிய மாற்றங்கள், இவனது பண்பு நலங்கள்—இவை குறித்துப் பார்ப்போம்.

ஒரு பாத்திரத்தின் பண்பினை மூன்று வழிகளில் நாம் அறிய முடியும்.

1. நூலாசிரியரின் கூற்றாக அப்பாத்திரத்தைப் பற்றி வரும் குறிப்புக்கள்.
2. கதையில் வரும் ஏனைய உறுப்பினர்கள் (நண்பர்களும், பகைவர்களும்) அப்பாத்திரம் பற்றிக் கூறும் சொற்கள்.
3. நாம் எடுத்துக்கொள்ளும் பாத்திரத்தின் நடை, உடை, பாவனை, பேச்சு.

இம்மூன்று வழிகளில் ஒரு பாத்திரத்தின் பண்பினையும் பான்மையினையும் நம்மால் உணர முடியும். இவ்வகையில் மாடலனது பண்பினை நாம் ஆய்தல் வேண்டும். இவனைப் பற்றி அறிவதற்கு, முதல் இரண்டு வழிகள் நமக்கு அவ்வளவு துணை செய்யவில்லை. இவன் பேச்சாலும் நடையாலுந்தான் நம்மால் இவனைப் பற்றி அறிய முடிகின்றது.

முப்பது காதைகள் உள்ள சிலப்பதிகாரத்தில் மாடலன் நான்கு காதைகளில் மட்டிலும் வருகிறான். பதினைந்தாம் காதையில் (அடைக்கலக் காதை) அதாவது கதை நிகழ்ச்சியின் உச்சக்கட்டத்தில்தான்—முதல் முதல் இளங்கோவடிகள் மாடலனை அறிமுகம் செய்கிறார்—இல்லை, இல்லை—தானே அறிமுகம் செய்து கொண்டு வருகிறான். பின்னர் 27, 28, 30 ஆகிய மூன்று காதைகளின் (நீர்ப்படைக் காதை, நடுகற் காதை, வரந்தரு காதை) மூலமாகவும் அவனது குரலை நாம் கேட்கிறோம். மேலே குறிப்பிட்ட நான்கு இடங்களிலும் மாடலன் வருகையால் ஒரு பெரிய மாற்றத்தையும், புது வளர்ச்சியினையும் நாம் காண்கிறோம். இக் காப்பியத்தில் நான்கு இடங்களில் மாடலன் வருகிறான் என்றால், அக்காப்பிய மாளிகையின் வளர்ச்சிக்கு நான்கு படிக்கல் இட்டான் என்பது பொருள். இவற்றை ஒன்றன் பின் ஒன்றாகப் பார்ப்போம்.

சிலப்பதிகாரக் கதையினை அனைவரும் அறிவர். கோவலன், கண்ணகி, மாதவி இவர்கள் வாழ்வில் விதி விளையாடுகின்றது. அவ்விளையாட்டிற்குக் கோவலன் கருவியாகிறான். பாண்டியனால் கள்வன் எனக் குற்றஞ் சாட்டப்பட்டுக் கொல்லப் படுகிறான். இக் கொலை நிகழ்ச்சி சிலம்பின் பதினாறும் காதையில் (கொலைக் களக் காதை) பேசப்படுகின்றது. இதற்கு முந்திய காதை யான அடைக்கலக் காதையில்தான் மாடலனை முதல் முதல் இளங்கோ அறிமுகம் செய்கிறார். அதாவது கோவலன் கொலை செய்யப்படுவதற்கு முதல் நாள்தான் மாடலனைக் கதையுடன் இணைக்கிறார். கோவலனது துன்பமுடிவு நமது உள்ளத்தில் இரக்கத்தையும், அதிர்ச்சியையும், அவலத்தையும் உண்டாக்குகின்றது. 'கல்லாக்களி மகன்' ஒருவனால் அக்கலை வாழ்வு முடிந்ததே என்று கலங்குகிறோம். நம் உள்ளத்தில் தோன்றும் இத்தகைய கலக்கமும், இரக்கமும், துன்ப மும், மாடலன் மூலமாகத்தான் தோற்றுவிக்கப்படு கின்றன. காப்பியத்தின் அவலப் பண்பையும், அவலச் சுவையையும் அவன்தான் உண்டாக்குகிறான். "கோவலன் கொலைக்குச் சற்று முன்னால் அறிமுகம் செய்யப்பட்ட ஒரு பாத்திரத்தால் எங்ஙனம் அவலச் சுவையையும், இரக்க உணர்வினையும் தோற்றுவிக்க முடியும்"—என்ற வினா நம் முன் எழுகின்றது. இதற்கு விடை காணவேண்டுமென்றால் கோவலனைப் பற்றிய சில செய்திகளை நாம் அறிதல் வேண்டும்.

சிலம்பின் தலைவன் கோவலன். அவன் வாழ்வைத் தொடக்கம் முதல் கவனித்து வரும் நமக்கு அவன் பண் பினைக் குறித்து உயர்ந்த எண்ணம் உண்டாகவில்லை 'மகளிர் பாராட்டும் அழகுள்ளவன்' என இளங்கோ அவனை அறிமுகம் செய்கிறார். பெண்கள் விரும்பக்கூடிய

வாறு ஒப்பனை செய்து காமக் களியாட்டத்தில் திளைப்பவன் என்ற குறிப்பு நம் உள்ளத்தில் தோன்றுகின்றது. கண்ணகியோடு கோவலன் "தாரும் மாலையும் மயங்கப் புணர்கிறான்"—என்றாலும் காதல் தணியவில்லை. தீராக் காதலோடு கண்ணகியின் திருமுகத்தைப் பார்க்கிறான். 'காமவெறி கொண்டவனோ' என்ற ஐயம் நம்முன் பிறக்கின்றது. உயர் குடியில் பிறந்த கோவலனை 'நகர நம்பியர் திரிதரு தெருவில்' நாம் சந்திக்கிறோம். மாதவியின் மாலையை அங்குதான் அவன் வாங்குகிறான். அவளுக்கு அடிமையாகிறான். காவிரிப்பூம் பட்டினத்தில் மந்த மாருதம் வீசிற்று என்பதைக் கூறவந்த இளங்கோ,

" குரல்வாய்ப் பாணரொடு நகரப் பரத்தரொடு
திரிதரு மரபிற் கோவலன் போல"

(இந்திரவிழவூர், 200-201)

என அத்தென்றலுக்குக் கோவலனை உவமை கூறுகிறார். எல்லாப் பெண்களுமே கோவலனது காதல் தெய்வங்கள்—தென்றல் சாய்க்கடையிலும் தவழும், குளிர் நறுஞ்சாந்திலும் தோயும்—கோவலனும் இதுபோன்றவன்தானோ என்ற ஐயமும் இங்கு தோன்றுகின்றது.

மாதவியிடம் சென்ற கோவலன் அங்கும் உறுதியோடு வாழவில்லை. இந்திர விழாவில் அவள் ஆடிய நடனத்தைப் பிறர் பார்த்துப் பாராட்ட, அதனால் பொறாமை கொள்கிறான்; அவளிடம் மெதுவாக வெறுப்புத் தோன்றுகின்றது. பின்னர் மாதவி, தன்னை ஒப்பனை செய்து காதல் மதுவூட்ட அதில் மயங்கி விடுகிறான். தெளிவும் மயக்கமும் நிலைக்கவில்லை. கானல் வரியால் மாதவியை விட்டுப் பிரிந்தேவிடுகிறான். கோவலனது நிலையற்ற பண்பு இங்கு தெரிகிறது.

மீண்டும் கண்ணகியிடம் செல்ல நினைக்கிறான். அவளை எந்த முகத்தோடு பார்ப்பது? எனவே கடை

வீதியில் அலைந்து திரிகிறான். கோவலனின் உள்ளத்தில் பழி நாணும் பண்பு இங்கு சற்று தலை தூக்குகின்றது. மாதவி அனுப்பிய கடிதத்தையும் வாங்க மறுத்து விடுகிறான்; பின்னர் மன உறுதி பெற்று மனைவியிடம் வருகிறான்; வறுமைக்கு நாணுகிறான். கலை உள்ளம், காம உள்ளம் மெதுவாக மறைகின்றது; வணிக உள்ளம் முகிழ்க்கின்றது. கண்ணகி தந்த சிலம்பை முதலாக வைத்து இழந்த பொருளை ஈட்ட நினைத்து மதுரைக்குப் புறப்படுகிறான்—அதுவும் விடியுமுன்; இங்கு அவனது மான உள்ளம் தெரிகின்றது. கண்ணகியும் உடன் செல்கிறாள். இடையில் கவுந்தியடிகளின் துணையும் தொடர்பும் கிடைக்கின்றன. நடந்து செல்லும்போது கவுந்தியால் வழிப்போக்கர் இருவர் சாபத்துக் குள்ளா கின்றனர். அவர்களை மன்னிக்கும்படி கோவலனும் கண்ணகியும் வேண்டுகின்றனர்.

''நெறியின் நீங்கியோர் நீரல கூறினும்
அறியாமை என்று அறிதல் வேண்டும்''

(நாடுகாண், 237-238)

என்று பரிந்து கூறுகின்றனர். மன்னிக்கும் மனப்பான்மை யுள்ள மனிதனைக் காட்சி தருகிறான் கோவலன். மனைவி யின் துயர்கண்டு தானும் வருந்துகிறான். மாதவியிடம் உள்ள கோபங்கூட இப்போது அவன் உள்ளத்தில் மறைந்துவிடுகின்றது. அவள் அனுப்பிய இரண்டாம் கடிதத்தைத் தன் பெற்றோருக்கு அனுப்பிவைக்கிறான். பெற்றோரை அவன் மறக்கவில்லை என்பதை இது உணர்த்துகின்றது. இந்தச் சூழ்நிலையில் கோவலனிடம் நல்ல பண்புகள் வளருவதாக நினைக்கிறோம். ஆனால், வழியில் பாணர் சிலர் பாடும் பாட்டோடு தானும் பாட ஆரம்பித்துவிடுகிறான். சோகத்தையும் தன் நிலையையும் மறந்து பாடுகிறான்.

கோவலன், கண்ணகி, கவுந்தி மூவரும் மதுரையின் புற நகர் வந்து சேர்கின்றனர். மதுரையினுள் சென்று தங்குவதற்கு இடம் பார்த்துவிட்டு வருவதாகச் சொல்லிச் செல்கிறுன் கோவலன். ஆனுல், சென்ற காரியத்தை மறந்து 'விழவுமலி திருநகரின்' கோலா கலத்தில் உள்ளத்தைப் பறி கொடுத்துத் திரும்பி விடுகிறுன்—பாவம்!

இதுவரை—பதினுன்கு காதைகள் முடிய—கோவலனது பண்பை உணர்ந்த நமக்கு அவனிடம் கோபமும், பரிதாபமும், வருத்தமும் ஏற்படுகின்றன. ஆனுல், முழுவதும் நமது அனுதாபத்துக்குரியவனுக அவன் ஆகவில்லை. கட்டிய மனைவியைக் கைவிட்டுக் காமவாழ்வு வாழ்ந்த அவன் இத்தகைய துன்பங்களை யெல்லாம் அனுபவிக்கத்தான்வேண்டும் என நாம் நினைக்கிறோம். கோவலன் வாழ்வின் இருண்ட பகுதியினைத்தான் நாம் இதுவரை கண்டோம். இதே நிலையில் அடுத்த காதையில் கோவலன் கொலை செய்யப்பட்டிருந்தால் நமக்கு எந்த விதமான உள்ள நெகிழ்ச்சியும் ஏற்பட்டிருக்காது. ஓரளவு வருந்தியிருப்போம்; ஆனுல் அது நிலைத்திருக்காது. கண்ணகியின் உணர்ச்சிகளைப் பல ஆண்டுகள் கொல்லாமல் கொன்ற கோவலனது உடலைக் 'கல்லாக் களிமகன்' சொல்லாமலே கொன்றுவிட்டான்—இயற்கை இது—என்றுதான் நாமும் அமைதியடைந்திருப்போம். காப்பியத்திலும் அவலச் சுவை தோன்றியிருக்காது. சிலம்பும் மணியாரமாகத் திகழ்ந்திருக்காது. இவற்றை யெல்லாம் கருத்தில் கொண்ட இளங்கோ திறம்பட மாடலனைக் கொலைகளக் காதைக்கு முன்பு, அடைக்கலக் காதையில் காப்பியத்தோடு இணைத்துவிடுகிறுர். கோவலன் வாழ்வில் ஒளி மிகுந்த சிறந்த பகுதிகளை யெல்லாம் மாடலன் வாயிலாக இளங்கோ விளக்குகிறுர்.

கோவலன் பிறந்து வளர்ந்த புகார் நகரத்திற்குப் பக்கத்திலுள்ள தலைச் செங்காடு என்ற ஊரைச்சேர்ந் தவன் மாடலன்; கோவலனைப்பற்றி நன்கு அறிந்தவன். தெற்கே குமரியாடி, மீண்டும் வடக்கே திரும்பும்போது, மதுரைப் புறநகருக்கு முன்பு, மாடலன் கோவலனைச் சந்திக்கிறான். அணி நலம் இழந்த மனைவியோடும், கவுந்தியோடும் கோவலனைச் சந்திப்போம் என்று மாடலன் நினைக்கவே இல்லை. கோவலனது வாடிய மேனி வருத்தங் கண்டவுடன் மாடலன் மன அரங்கில் கோவ லனின் முன்னைய வாழ்வு நிழற் படமென ஓடுகின்றது. மாதவிக்குத் தன் மூலம் பிறந்த மகளுக்குத் தன் முன்னோ ரைக் காத்த 'மணிமேகலை' என்ற குலதெய்வத்தின் பெயரைக் கோவலன் சூட்டினான். அச் செயலில் கோவலனது நன்றி மறவாமை புலனாகின்றது. பெயரிட்ட அந்தநாளில் வறுமையுற்றோருக்கெல்லாம் அள்ளிஅள்ளிப் பொருளைக் கொடுத்தான் கோவலன். இங்கு அவனது வள்ளன்மை தெரிகின்றது. அவ்வேளை தானங்கொள்ள வந்த முதிர்ந்த பார்ப்பனனை மதங்கொண்ட யானை ஒன்று பிடித்துக்கொள்கின்றது. கண்ட கோவலன் ஓடிச்சென்று அந்தணனைக் காப்பாற்றுகிறான். இங்கு அப்பெருந்தகை யாளனின் கருணைமறம் புலனாகின்றது. இம்மட்டோ! பிரிந்த கணவனையும் மனைவியையும் இணைப்பதற்குப் பொருளுதவி செய்கிறான் கோவலன். இதன் மூலம் இல் வாழ்வில் ஒளியேற்றும் அருட் சுடராகக் காட்சி தருகிறான். புகார் நகரில் ஒரு பூதத்திடம் அகப்பட்ட ஒருவனைக் காக்க வேண்டித் தன்னையே கொல்லும்படி பூதத்திடம் வேண்டு கிறான் கோவலன். பூதமோ "உன்னைப்போன்ற நல்ல உயிரை நான் கொன்றால் நரகம் அடைவேன்" என்று கூறி மறுத்துவிடுகின்றது. கோவலனே பூதத்தால் கொல்லப்பட்டவன் குடும்பத்திற்கு வேண்டிய பொரு ளுதவி செய்து காப்பாற்றுகிறான். இவ்வாறு கோவலனது

வாழ்வில் நடந்த பெருமை மிகு நிகழ்ச்சிகளை யெல்லாம் நாம் அறியாத நிகழ்ச்சிகள்—மாடலன் ஒன்றன்பின் ஒன்ருக அடுக்குகிருன். ''அப்படிப்பட்ட நீயா இவ்வாறு வந்திருக்கிருய்?''—எனக் கோவலனை நோக்கி, சோகம் ததும்பிய குரலில் கேட்கிருன். ''இந்தப் பிறவியில் நீ நல்லது செய்தாய் என்பது எனக்கு உறுதியாகத் தெரியும்—ஒரு வேளை போன பிறப்பில் ஏதேனும் தீவினை செய்தாயோ என்னவோ? இன்றைய நிலைக்கு அதுவே காரணமாக இருக்கலாம்—'' என அமைதி கூறி, வருந்தி நிற்கிருன் மாடலன்.

'கோவலன் இவ்வளவு சிறந்தவனு? மாடலன் பேசுவதை எப்படி நம்புவது'—என்ற விளுவும் நம்முள் எழாமலில்லை. மாடலனுக்குக் கோவலனைப் புகழ்ந்து கூற வேண்டும் என்ற தேவை இப்போது இல்லை. மாடலன் அரசு விழை பண்பாளன்; மறையோன்; பொய் பேசும் இயல்பினன் அல்லன். மேலும் கோவலன், செல்வம் எல்லாம் தொலைத்து வறியனுய் பிழைப்புக்காக மதுரை செல்கிருன். இப்படிப்பட்ட முன்னுள் செல்வந்தனைப் புகழ்ந்து பேசுவதால் மாடலனுக்கு என்ன கிடைக்கப் போகின்றது? எனவே மாடலன் கூற்று உண்மை என்பதில் ஐயமில்லை.

கோவலனது பண்பினைப் பற்றி ஓர் உயர்ந்த எண்ணத்தை மாடலன் பேச்சு நம்முன் தோற்றுவிக்கின்றது. ''ஐயோ! வீரமும், ஈரமும், அறமும், மறமும் ஒருங்கியைந்த பண்பட்ட நெஞ்சினனுகிய கோவலன் புண்பட்ட நெஞ்சோடு வந்திருக்கிருனே'' என நாம் வருந்துகிருேம். ''பரவாயில்லை! எப்படியும் நாளை மதுரையில் சிலம்பை விற்று நல்லதொரு வாழ்வு வாழ்வான்'' என்று நம்மை நாமே தேற்றிக்கொள்கிருேம். மதுரையில் கோவலனும் கண்ணகியும் வாழவிருக்கும் வாழ்வைக்

காண வாயூறி நிற்கிருேம். ஆனல்... அந்தோ! விதி சதி செய்துவிடுகின்றது. யாரும் எதிர்பாராத சூழ்நிலையில் மன்னனுல் கள்வன் எனக் குற்றஞ்சாட்டப்பட்டுக் கோவலன் கொலே செய்யப்படுகிருன். கலே வாழ்வு முடிகின்றது. அப்பெரு மகனின் வீரப்புகழ் வாழ்வு விஞடிக்குள் முடிந்துவிட்டதே என உள்ளம் வெந்து உருகுகிருேம். இந்த அளவுக்குக் கோவலனின் கொலே நமது உள்ளத்தைத் தொடுகின்றது; சுடுகின்றது. இதற்குக்காரணம் மாடலனின் பேச்சு; கோவலனேப்பற்றி அவன் மூலம் நாம் அறிந்த செய்திகள். எனவே அவலத் தலேவனின் பண்பினே உயர்த்தி, அவலச் சுவை யினேக் காப்பியத்திலும் கற்போர் உள்ளத்திலும் தோற்று விக்கும் பணியினே மாடலன் செய்து முடிக்கிருன். மாடலன் இல்லாவிட்டால் கோவலன் சாவுக்கு நாம் வருந்தியிருக்கமாட்டோம். கண்ணகியைத் தவிக்கவிட்ட பரத்தமையுடையோன் தகுந்த தண்டனே அடைந்தான் என்றுதான் நினேத்திருப்போம். எனவேதான் மாடலனே அறிமுகம் செய்த 'அடைக்கலக் காதை' உயிர் நிலேக் காதை என்ற பெயரோடு திகழ்கின்றது.

மதுரைப் புறநகரில் சந்தித்த மாடலனே அதன் பின் கங்கைக் கரையிலே சந்திக்கிருேம். அங்கு—கண்ணகிக்குப் பத்தினிப்படிவம் அமைக்க இமயத்தில் கல்லெடுத்து மீளும் செங்குட்டுவன் படைவீரருடன் பாடி வீட்டில் அமர்ந்து வெற்றிவிழாக் கொண்டாடி மகிழ்கிருன். அங்கு மாடலன் வருகிருன். மன்னனே முறைப்படி வாழ்த்தி "அரசே! மாதவியின் கானல் பாட்டு கனக விசயர் முடித்தலே நெரித்தது" என ஆவல் தூண்டும் முகவுரையோடு பேச்சை ஆரம்பிக்கிருன். செங்குட்டு வனுக்கு ஒன்றும் புரியவில்லே. மாடலன் விளக்குகிருன். கண்ணகி, கோவலன், மாதவி—இவர்கள் வரலாற்றை

அதன் பின்தான் கங்கை வந்த காரணத்தையும் மன்னவன் கேட்காமலேயே கூறுகிறான். "அரசே! குமரி ஆடி மதுரை மீண்டேன். அப்போது பல செய்திகள் அறிந்தேன். கோவலனையும் கண்ணகியையும் அடைக்கலமாக வைத்திருந்த மாதரி, அடைக்கலப் பொருளை இழந்து விட்டேனே என அழுது தியில் விழுந்து மடிந்தாள். கவுந்தியடிகளோ உண்ணா நோன்பிருந்து உயிர் விடுகிறார். இதை அறிந்தபின் புகார் நகர் சென்றேன். கோவலன் முடிவினை அறிந்த அவன் தாய் மடிந்ததையும் தந்தை துறவு பூண்டதையும் உணர்ந்தேன். கண்ணகியின் தாய் தந்தையரும் இதே நிலை அடைந்தனர். மாதவியோ மனந்துடித்தாள்—மகள் மணிமேகலைக்காகத் தன் உயிர் காத்தாள். மகளையும் துறவு பூணச் செய்தாள். இவ்வாறு பல நல்லுயிர்கள் துடித்துச் சாவும் செய்தியைக் கேட்ட நான் அப்பாவம் போக்கக் கங்கை வந்தேன்"—என மாடலன் கூறினான்.

மாடலன் பேச்சு மன்னனைக் கவர்ந்தது. கேட்டுக் கொண்டேயிருக்கிறான். சோழ பாண்டிய நாட்டில் நடந்த அரசியல் மாற்றங்கள் பற்றியும் மாடலனிடம் கேட்டு அறிகிறான். பின்னர்த் தன் நிறை அளவுள்ள பொன்னை மாடலனுக்குப் பரிசாகத் தருகிறான்.

இங்கு மாடலன் பல செய்திகளை நமக்கு உணர்த்துகிறான். கோவலன் கொலைக்குப்பிறகு மதுரையிலும் பூம்புகாரிலும் நடந்த செய்திகள் நமக்குத்தெரியா. கொலையின் அதிர்ச்சியால் பாதிக்கப்பட்டவர்கள் யார், யார்—என்ற வினாவுக்கு மாடலன்மூலம் விடை கிடைக்கின்றது.

மாடலன் இங்கு இல்லாவிட்டால் இச் செய்திகளை நாம் அறிந்திருக்கமுடியாது. திரைப்படங்களில் 'பின்னோக்கிப் பார்க்கும்' (Flash Back) காட்சிகளை நாம் கண்

டிருக்கிறோம். இதேநிலையில்தான் மாடலன் இங்கு பயன்படுகிறான். முன்பு கோவலனின் புகழினைக் கூறிய போதும் சரி, இப்போது செங்குட்டுவனிடம் பேசும் போதும் சரி, இவ்விரு இடங்களிலும் நமக்குத் தெரியாமல் நடந்த நிகழ்ச்சிகளை உணர்த்தும் பாத்திரமாகவே மாடலன் தோன்றுகிறான்.

மாடலன் பேசும் பாணியே தனி. கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்ப் பேசும் ஆற்றல் அவனுக்கு உண்டு. செங்குட்டுவனிடம் தொண்ணூறு வரிகள் பேசுகிறான் மாடலன். போரில் அலுத்துக் களைத்திருக்கும் மன்னன் இதைக் கேட்டுச் சலிப்படைந்திருக்கவேண்டும் —அடையவில்லையே! இதற்கு மாறாக அவன் பேச்சை விரும்புகிறான். மாடலனின் ஆற்றல்மிக்க நா வன்மையை யன்றோ இது காட்டுகின்றது!

கங்கைக் கரையிலிருந்த செங்குட்டுவன் வஞ்சிநாடு வந்து சேர்ந்தான். தோற்ற வடவரை விலங்கிட்டுச் சோழனுக்கும் பாண்டியனுக்கும் காட்டி வரும்படி முன்னமே ஆணையிட்டிருந்தான். காட்டச் சென்ற காவலர் இப்போது திரும்பிவந்தனர். "தோற்றவரைக் கைது செய்வது வீரமன்று"—எனச் சோழனும் பாண்டியனும் சொன்ன பழிமொழியைக் கூறினர். இதைக் கேட்ட செங்குட்டுவனின் தாமரைச் செங்கண் தழல்நிறங் கொள்கின்றது. இதேபோலத்தான் தமிழரின் வீரத்தின் மீது கனகவிசயர் ஒரு சொல்லை வீசினர்; அதன்பயன் இன்று கல்லைச் சுமந்தனர். இப்போது என்ன நடக்குமோ என அவையோர் அஞ்சினர். 'மீண்டும் போர் வருமோ' எனப் பேதுற்றனர். அவ்வேளை மாடலன் வருகிறான். அசைவின்றிப் பேச்சின்றி அச்சடித்த பதுமையாய் இருக்கும் அவையில் கம்பீரமாக எழுந்து நின்று "அரசே! அமைக நின் சீற்றம்" என அமைதியாகப் பேசுகிறான்.

யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை முதலியவற்றையெல்லாம் கூறி, அழிந்து போகும் இந்த உடற் குகையில் அழியாத ஆத்ம மலரைப் பயிர் செய்தல் வேண்டும் என வேண்டுகிருன் மாடலன். “எல்லா உயிரும் போகும் வழியில் உனது உயிரும் செல்ல நான் விரும்பவில்லை. ஐம்பது ஆண்டுகளைப் போரில் கழித்த நீ இனியும் போரை நினைக்காதே! நீ அறவேள்வி செய்து நல்வாழ்வு வாழவேண்டும் என்பது என் ஆசை” எனக்கூறி முடிக்கிருன். குட்டுவன் மனமும் மாறுகின்றது. சோழபாண்டிய நாடும் பிழைத்தன ; தமிழகத்தின் மானமும் தழைத்தது.

தமிழகத்தில் ஒற்றுமை வேண்டும் என மாடலன் கருதும் உயர்ந்த எண்ணம் நம்மைக் கவருகின்றது. அவனது நல்ல மனத்தை இங்கு நாம் பார்க்கிறோம்.

“பெரும் பேரியாக்கை பெற்ற நல்லுயிர்
மலர்தலை உலகத் துயிர்போகும் பொது நெறி
புலவரை யிறந்தோய்! போகுதல் பொறேன்”

(நடுகல், 172-174)

என்று மாடலன் கூறும்போது உருகாத நெஞ்சும் உருகு மன்றோ! சேரன் மனந்திரியாது என் செய்வான்? இங்குச் கதைப்போக்கில் பெரிய மாற்றத்தைத் தோற்றுவிக் கின்ருன் மாடலன். இளங்கோ கூறவேண்டிய கருத்துக் களை மாடலன் கூறுகிருன். 'Author's level of perception என்றுசொல்வார்களே அந்த வகையில் மாடலன் பயன் படுகிருன்.

பின்னர் இறுதிக்காதையாகிய வரந்தருகாதையில் மாடலன் தோன்றுகிருன். செங்குட்டுவன் அமைத்த பத்தினிக் கோவிலில் தேவந்தி, செங்குட்டுவன், மாடலன் இவர்களைச் சந்திக்கிறோம். தேவந்தி ஆவேசமுற்று

ஆடுகிருள். மாடலன் கையிலுள்ள தெய்வத்தன்மை பெற்ற தண்ணீரைச் சுட்டிக்காட்டி, அதை அங்கு விழாக் காண வந்திருக்கும் மூன்று குழந்தைகளின்மேல் தெளிக்கும்படி கட்டளையிடுகிருள். இந்த நிகழ்ச்சி மன்னனை வியப்படையச்செய்கின்றது. மாடலனை நோக்குகிருன். குறிப்பறிந்த மாடலன் தேவந்தியின் வரலாற்றைக்கூறி, சாத்தனைக் கணவனுகப்பெற்ற அவள் கதையினைச் சொல்லி, அச்சாத்தன் தன்னிடம் தந்த தண்ணீரின் தன்மையினையும் செங்குட்டுவனிடம் கூறுகிருன். இங்கு தேவந்தியின் வரலாற்றைச் செங்குட்டுவனுக்கு உணர்த்தும் வாயிலாக மாடலன் பயன்படுகிருன். காப்பியத்திற்கு இன்றியமையாத இயற்கையைக் கடந்த ஆற்றல்களும் (Super natural elements) இவனுல் வெளியாகின்றது.

சிலம்பின் கதை வளர்ச்சிக்கும், காப்பிய அமைதிக்கும் மாடலன் மிகவும் இன்றியமையாத பாத்திரம் என்ற உண்மை நமக்குப் புலனுகின்றது. பொதுவாக நோக்குமிடத்தில் மாடலன் தேச சஞ்சாரி. நாட்டில் நடக்கும் நிகழ்ச்சிகளை மன்னனுக்கும் பிறருக்கும் அறிவிப்பவன். மன்னர் விரும்பும் பண்பாளன். சொல்லாற்றல் மிக்கோன் ; நல்லவன்—வல்லவனுங்கூட.

சிலப்பதிகாரம் மாடலனுல் சிறப்புப் பெறுகின்றது. இக் காப்பியத்தின் அவலச் சுவை இவனுல் உயர்கின்றது. நாட்டு நிகழ்ச்சிகளை அறிவிக்கும் தகுதிபெற்றவனுகவும், தெய்வத்திருவருள் நிறைந்தவனுகவும், மன்னருக்கு உறுதிப் பொருளுணர்த்தும் அறிஞனுகவும், விளங்குகிருன். பல இடங்களில் இளங்கோவின் பிரதிநிதியாகவே திகழ்கிருன். இக்காப்பியத்தின் போக்கு முழுவதையும் உணர்ந்த, அறிந்த ஒரு பாத்திரமாக இளங்கோ இவனை உருவாக்குகிருர். இளங்கோவை

யன்றி வேறு யாராலும் அறிந்திருக்க முடியாத சில நிகழ்ச்சிகளைச் சிவன் வாயிலாக அவர் கூறுகிறார். எனவே மாடலனது தொடர்பால் சிலம்பு காப்பிய மாகின்றது. இன்றேல் நாடோடிக் கதைபோல நடந்து முடிந் திருக்கும்.

## யார் குற்றம்

பழந்தமிழ் இலக்கியத்தின் சீர்மையும், புதுமைத் தமிழின் பொலிவும் பெற்று விளங்குவது சிலம்பு ஒன்றே யாம். இக் கதையினைப் பலரும அறிவர். கதை நிகழ்ச்சி யிலே எவ்வளவோ சிக்கல்களைக் காண்கிறோம். 'அவலம்' இந்நாடகத்தின் பின்னணி நிதமாக அமைந்து கிடக் கின்றது. காவியத் தலைவன் கோவலன் 'கல்லாக் களி மகன்' ஒருவனால் கொல்லப் படுகிறான். 'கற்பு கடம்பூண்ட' கண்ணகியும் காதலன் பிரிவினால் கலங்கி மடிகிறாள். எழில் நலம் மிகுந்த மாதவி எல்லா அணிகளையும் களைந்து துறவுக் கோலம் கொள்கிறாள். 'மல்லன் மூதூர் மதுரை' அழியத் தென்னவன் காவல் சிதைகின்றது. பகையறி யாப் பாண்டியனும் தன் தவறு நினைந்து வருந்தி உயிர் விடுகின்றான். பாண்டி மாதேவியும் ஒருங்குடன் மடி கின்றாள். இவ்வாறாக இந்நாடகத்தில் வருவோர் ஒவ் வொருவரும் துன்ப முடிவையே அடைகின்றனர். இவ்வித அவல நிகழ்வுக்குக் காரணம் யார்? யாருடைய குறையால் இத் துன்பங்கள் ஏற்பட்டன?—என்பன போன்ற வினாக்கள் நம் மனத்திரையில் எழுகின்றன. அவைகளின் எதிரொலியே இக் கட்டுரை.

### "என் பிழைப்பு"

கலைக்காக வாழ்ந்து கலைக்கே தன்னை உரிமை ஆக்கியவள் மாதவி. கலையிலே உள்ளத்தைப் பறி கொடுப்பவன் கோவலன். கலையில் இவ்விருவரும் பிணைக்கப்பட்டார்கள். கட்டிய மனைவி கண்ணகியையும்

மறந்து 'விடுதல் அறியா விருப்பினன் ஆயினன்' கோவலன். வாழ்க்கை இன்பமாகச் சென்றது. ஒரு நாள் கடற்கரையிலே ஏற்பட்ட ஊடல் காரணமாகக் கோவலன் பிரிந்து விடுகிறான். மாதவி கலங்கி மயங்குகிறாள். வழக்கமாக ஏற்படும் சிறு ஊடல் என முதலில் நினைத்தாள். பிறகுதான் கோவலன் இனித் தன்னை வந்து அடைய மாட்டான் என்ற உண்மை விளங்குகின்றது. அவனுடன் 'நிலவுப் பயன் கொண்டு' கலவியும் புலவியும், கலந்து நுகர்ந்த அந்த இன்ப நாட்கள் நினைவுக்கு வருகின்றன. ஒன்றிப் பழகி, பல ஆண்டுகள் தன்னுடன் வாழ்ந்த கோவலன் திடீரென பிரிந்ததற்குத் தானே காரணம் என நினைக்கிறாள்; கோவலன் புகார் நகரத்தை விட்டே போய்விட்டான் என்ற செய்தி அவளைத் திடுக்கிடச் செய்கின்றது. கற்பே அணியான கண்ணகியின் உள்ளத்தை நோகச் செய்த குற்றம் தன்னுடையதே எனத் துணிகிறாள். கோவலன் கண்ணகி இருவருக்கும் தன்னால் எல்லையற்ற துயர் வந்ததே என நைகிறாள். கோவலனிடம் மன்னிப்புக் கேட்க மனம் தூண்டுகின்றது. முதலில் கோவலன் தன்னிடம் திரும்பி வரவேண்டும் என விரும்பியவள், பின்னால் தன்னை மன்னித்துக் கண்ணகியுடன் இன்ப வாழ்வு வாழட்டும் என விரும்புகிறாள். ஒரு அந்தணன் மூலம் தன் கருத்தினைக் குறிப்பாகக் கடித வாயிலாக அறிவிக்கிறாள்.

> "......... குலப்பிறப் பாட்டியொடு இரவிடைக் கழி
> தற்கு என் பிழைப்பு அறியாது—கையறு நெஞ்சம்
> கடியல் வேண்டும்........."

என எழுதியனுப்புகிறாள். கோவலன் தன்னை விட்டுப் பிரிந்ததற்கும், பின்னர் மனைவியுடன் புகாரினின்றும் போனதற்கும் தன் பிழையே காரணம் என்ற குறிப்பு இக் கடிதத்திலே ஒலிக்கக் காண்கிறோம்.

ஆனால், மாதவியிடம் எவ்விதப் பிழையும் இருப்பதாக நமக்குத் தெரியவில்லை. கோவலனது நிலையில்லாத உள்ளமே இவ்வித இடர்ப்பாடுகளுக்குக் காரணம் என எண்ணிக் கொண்டிருந்த நமக்கு மாதவியின் கடிதம் வியப்பினை அளிக்கின்றது. ஒரு பிழையும் செய்யாதவள் குற்றத்தைத் தன்மேல் சுமத்துவது ஏன் என நமக்குப் புரியவில்லை.

" தன் தீது இலள்"—
" என் தீதே "

உளம் நொந்த மனநிலையுடன் கோவலன் மதுரைக்குப் போய்க் கொண்டிருக்கிறான். 'வண்ணச் சீரடி மண் மகள் அறியாதவாறு செல்வம் கொழிக்கும் சூழலிலே வளர்க்கப் பட்ட கண்ணகியைக் கால் கடுக்கக் காட்டு வழியில் அழைத்து வந்த தன் பேதைமையை நினைந்து உள்ளம் வெதும்புகிறான். பொருள் அனைத்தையும் கலைக்காகவே செலவிட்டு அந்தக் கலையின் அடிப்படையில் காமத்தை அனுபவித்த நாட்கள் மனத்திலே நிழலிட்டன. தன் காதல் மனைவியின் மங்கல அணி தவிரப் பிற அணிகள் தன் காமக் கலை விளையாட்டினுக்கே பயன் படுத்தப் பட்டதை நினைந்தான். தான் செய்த தவறுக்கு வருந்துகிறான். இந்த மன நிலையுடன் மதுரை செல்லும் கோவலனை மாதவியின் கடிதம் அடைகின்றது. தன்னால் ஏற்பட்ட துன்பங்களை உணர்கிறான். மாதவி நிலையினையும், தன் தாய்தந்தையர் துயரினையும் அறிகிறான். தான் பிறந்து வளர்ந்த குடும்பத்திற்குத் தன்னால் ஏற்பட்ட களங்கம் அவன் உள்ளத்தைக் கலக்குகின்றது. கடிதத்தைப் படித்து முடித்தவுடன்,

" தன்தீது இலள் எனத் தளர்ச்சி நீங்கி—
என்தீது என்றே எய்தியது உணர்ந்து........"

வருந்துகின்றான்.

கடிதத்தில் மாதவி 'என் பிழைப்பு' எனக் கூறுகிறாள். ஆனால் கோவலனோ 'இல்லை, இல்லை! என்தீது தான்' என உணர்ந்து உரைக்கிறான். இத்துடன் நில்லாமல் 'மாதவி தீதிலள்' எனவும் அஞ்சாது கூறுகிறான். எல்லாம் வேடிக்கையாகவே இருக்கின்றது.

## "யானே கள்வன்"

சோழ நாட்டினின்றும் பாண்டிய நாடு வருகின்றனர் கோவலனும் கண்ணகியும். தங்கள் சிலம்பினை விற்று, அதன்மூலம் நல்லதொரு வாழ்வு வாழலாம் என நினைக்கின்றனர். ஒற்றைச் சிலம்பை விற்று வரலாம் என நினைத்து கோவலன் மதுரை நகருள் செல்லுகிறான். ஆனால்...பட்டத்து ராணியின் சிலம்பு கவர்ந்த கள்வன் எனக் குற்றம் சாட்டப்பட்டுக் கொலை செய்யப் படுகிறான் கோவலன். கணவனுக்காகக் கண்ணகி வழக்காடி வெற்றி கொள்கிறாள். 'மறைநா ஓசை அல்லது மணிநா ஓசை கேட்டறியாத' பாண்டி நாட்டிற்கு நேர்ந்த பழியை அறிகிறான மன்னவன். முத்துச் செல்வமும் கல்விச் செல்வமும் பூண்டு பழி அறியாது ஆண்டுவந்த பாண்டியன் பரம்பரைக்குத் தன்னால் கழுவ முடியாத களங்கம் வந்ததை நினைத்துக் கலங்குகிறான். குடி பழி தூற்றும் கொடுங்கோல் மன்னர்' பட்டியலிலே தென்னவன் குலம் இடம் பெற்று விட்டதே என வருந்தி 'யானோ அரசன்? யானே கள்வன்' என மயங்கி விழுந்து மடிகிறான்.

சிற்றரசர் வந்து திறையொடு பணியும் சிறப்பு வாய்ந்தவன்; தமிழும் இனிமையும் தவழ்ந்து விளையாடும் மதுரைத் தலைவன்; வேற்று நாட்டார் பணக் குவியலுடன் மரக் கலங்களில் வந்து முத்துச் செல்வத்திற்குப் போட்டியிடும் கொற்கைத் துறைவன்; இவ்வளவு சிறப்பமைந்த பாண்டியன் கோவலன் கொலைக்கு வித்திட்ட

பொற்கொல்லனையும் மறந்து 'யானே கள்வன்' எனத் தன் குற்றத்தை ஒப்புக் கொள்ளுகிருன். அத்துடன் நில்லாமல் தன் உயிரைக் கொடுத்து வளைந்த செங் கோலை நிமிர்த்து விடுகிருன். இக்காட்சிகள் நம்மை வியப்பினில் ஆழ்த்துகின்றன.

'' தீத் தொழிலாட்டியேன் ''
''தென்னவன் தீதிலன் ''

நம் வியப்பு நீங்குவதற்குள் கண்ணகி தோன்று கிருள். ஆனல் கண்ணகி, கண்ணகியாகக் காட்சியளிக்க வில்லை. ஆற்ருத சோகமும் அணையாத கோபமும் கொண்டு வீரபத்தினியாகத் தோன்றுகிருள். கற்பின் வலியால் மதுரைக்கு எரியூட்டுகிருள். மாட மாளிகைகள் அழிகின்றன. கனல் பற்றி எரிகின்றது. கொடுங்கோல் மன்னன் வாழாத கூடல் நகரிலே புகை மண்டுகின்றது. கண்ணகிக்கு இன்னும் வெறி தணியவில்லை. சினத்துடன் சிரிக்கிருள்.

''யானமர் காதலன் தன்னைத் தவறிழைத்த—
கோனகர் சீறினேன் குற்றமிலேன்''

எனக் குமுறுகிருள். மதுரை எரிய எரியக் கண்ணகிக்குச் சினம் தணிகின்றது. கண்ணகி, கண்ணகியாகிருள். குற்ற மற்ற கோவலனின் கொலை; பாண்டியனுக்கும் தேவிக்கும் நேர்ந்த அவல முடிவு; கனலால் அழிந்து கொண்டிருக்கும் மதுரை மாநகரம்; உயிர்தப்ப ஓடும் எண்ணற்ற மக்கள்—என்ன கோரக் காட்சி! நினைத்துப் பார்க்கிருள் கண்ணகி. 'குற்றம் யார் மேல்?' என்ற வினு எழு கின்றது. தானே தவறுடையவள், குற்றம் செய்தவள் என உணர்கிருள். யாரிடம் தன் குற்றத்தைக் கூறி வருந்துவது? எனவே மதுரையின் மேலை வாயிலைக் கடந்து வெளியேறுகிருள். நடந்தாள்; நடந்தாள்; நடந்து

கொண்டே யிருந்தாள். சேரனின் திருச்செங்கோடு மலைக்கு வருகிறாள். அங்குள்ள குறத்தியர் 'யாரம்மா?' எனக் கேட்கின்றனர். "தீத் தொழிலாட்டியேன் யான்" என ஏங்கிக் கூறுகிறாள். இதோடு நிற்கவில்லை கண்ணகி. சேர நாட்டிலே தெய்வ வடிவில் காட்சி தந்து 'தென்னவன் தீதிலன் தேவர்கோன் தன் நல்விருந்து ஆயினான்" எனக் கூறிப் பாண்டியனுக்குப் பரிந்து பேசி நம்மைத் திகைக்க வைக்கிறாள்.

மாதவியும் பாண்டியனும் தாங்களே குற்றவாளி என்கின்றனர். ஆனால் கண்ணகியும் கோவலனும் தங்கள் குற்றத்தினை ஒப்புக் கொண்டதுமின்றித் "தென்னவன் தீதிலன்" "மாதவி தீது இலள்" என பிறர்க்குப் பரிந்து பேசும் சிறப்பு நம்மைக் கவர்கின்றது.

## குறையும் நிறையும்

குறையும் நிறையும் சேர்ந்ததே மனிதப் பண்பு. குணமே உடையவர்களையும் குற்றமே உடையவர்களையும் நம்மால் காண இயலாது. சிலரிடம் குறை மிகுந்திருக்கலாம்; பலரிடம் நிறை நிறைந்திருக்கலாம். குறையுள்ளவர் தங்கள் குறைகளை ஒப்புக் கொள்ளவே மாட்டார்கள். இது போலவே குற்றம் செய்தவர்களும் தங்கள் குற்றத்தினை ஒப்புக் கொள்வது அருமை. அப்படியே ஒப்புக் கொண்டாலும் தாங்கள் நீதியின் அடிப்படையிலே அக்குற்றத்தினைச் செய்ததாக வாதாடுவார்கள். இராம காவியத்திலே வாலியைக் கொன்ற இராமனால் 'தான் செய்தது குற்றம்' எனத் துணிந்து கூற முடியவில்லை. தான் செய்த தவறினை நீதித் திரையிட்டு மறைப்பதை அங்கு காண்கிறோம். ஆனால் இளங்கோவின் 'சிலம்பு உலகில்' எல்லோரும் விசித்திரமாகக் காட்சியளிக்கின்றார்கள். ஒவ்வொருவரும் தாங்களே குற்றம்செய்

தவர்கள் எனத் துணிந்து, ஆனால் உளம் நொந்து, கூறுவது நம்மை வியப்பினில் ஆழ்த்துகின்றது.

சிலம்பிலே உள்ள சிக்கல்களுக்கும், பாத்திரங்களின் அவல முடிவினுக்கும் 'யார் பொறுப்பு' என நம்மால் துணிந்து முடிவுகட்ட முடியவில்லை. எல்லாப் பாத்திரங்களும் குறையும் நிறையும் கலந்தவர்களாகவே காணப் படுகின்றார்கள். சிலம்பு உலகிலே தோன்றும் பலவித வேறுபட்ட பாத்திரங்களின் சிறு குறைகளே இவ்விதச் சிக்கல்களுக்கும் அவல முடிவினுக்கும் காரணம் எனக் கூறலாமல்லவா?

# ஊடல் விளைத்த புதுமை

ஒருவனும் ஒருத்தியும் மனமொத்து வாழும் காதல் வாழ்வில் 'ஊடல்' என்னும் சிறு பிணக்கு ஒரு சிறந்த அங்கமாகத் திகழ்கின்றது. காதல் வாழ்விலே கனிவை ஊட்டுவதுஇவ்வூடல்; காதலர் உள்ளத்திலே இன்பத்தைப் பெருக்குவதும் இவ்வூடலேயாகும். ஊடல் இல்லாக் காதல் வாழ்வு 'உப்பில்லாப் பண்டம்' எனவே கருதப் படும். இன்பத்தை வளர்க்கும் இந்த ஊடல் நீடித்து நிற்றல் கூடாது என்பது அறிஞர் கருத்து. பிணக்குத் தோன்றி ஒரு சில விநாடிகளுக்குள் அது தீர்ந்து விடுதல் வேண்டும். நாட்கணக்கில் நீளும் பிணக்கு ஊடல் ஆகாது. இத்தகைய ஊடலால் இன்பமும் காணமுடியாது. எனவே காதலரின் வாழ்வில்தோன்றும் ஊடலைத் தீர்ப்பதற்குச் சில வழிகளைக் கண்டு பிடித்தனர் சான்றோர். பெரும்பாலும் காதலனே காதலியிடம் கொஞ்சிக் கெஞ்சி அடிபணிந்து ஊடலைத் தீர்த்து விடுவது வழக்கம். சில வேளைகளில் அவனால் அவள் ஊடலைத் தீர்க்க இயலாமல் போய்விடும். இவ்வேளைகளில் பிறர் தலையிட்டு ஊடலை நீக்குவர்.

காதலிருவர் கருத்தொருமித்து வாழும் இன்ப வாழ்வில் பிறர் தலையிடுவதைப் 'பேதமை' எனக் கருதுவர் சிலர். ஆனால் வேற்றார் தலையிடாமல் ஊடல் தீர்வதற்கு வழியும் கிடையாது என்ற நிலையில் அவர் களின் தலையீடு அனுமதிக்கப்படுகின்றது. ஊடல் நீக்க உதவுபவர்கள் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளராக இருத்தல் வேண்டும். இந்த அடிப்படையில் யாரெல்லாம் ஊடல் தீர்க்க உரிமையுடையவர்கள் என்பதைத் தொல்காப்பியர் வரையறை செய்கிறார். ஊடல் தீர்க்கும் வாயில்கள் என்ற தலைப்பில் அவர் கூறுகிறார்:

'' தோழி, தாயே, பார்ப்பான், பாங்கன்.
பாணன், பாடினி, இளையர், விருந்தினர்,
கூத்தர், விறலியர், அறிவர், கண்டோர்
யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப ''

(தொல்-கற்பு-193)

எனவே தோழிமுதல் கண்டோர் வரையிலுள்ள பன்னிருவரே ஊடல் கொண்ட காதலர் வாழ்வில் தலையிட்டு அதைத் தீர்க்கும் உரிமை பெற்றவர்கள் என அறிகிறோம். இப்பகுப்பு முறை தமிழனின் மாண்புற்ற வாழ்வை, மாசற்ற புகழை, காதல் வாழ்வின் சிறப்பை நமக்கு எடுத்துக் காட்டுகின்றது.

தொல்காப்பியரின் இக்கருத்தினை அடியொற்றியே பின்னையோர் யாவரும் நூலியற்றினர். ஆனால் இடைக் காலத்தில் சிலர் இதிலே மாற்றம் காண விரும்பினர். ஊடல் நீக்கும் வாயில்களின் பகுப்பு முறையிலே புதுமையைத் தோற்றுவித்த பெருமை திருத்தக்கத் தேவர் என்ற செந்தமிழ் முனிவரையே சாரும். இவர் இயற்றிய 'சீவக சிந்தாமணி' என்ற தமிழ்க் காவியத்திலே இப்புதுமையினை நாம் காண்கிறோம்.

ஒருவன் ஒருத்தி என வாழ்ந்த வாழ்வை மாற்றி எட்டு இளங்கன்னியரை மணந்து வாழும் சீவகன் என்னும் செம்மலின் வரலாற்றினைக் கூறுவதே சீவக சிந்தாமணி. மனைவியர் எண்மரில் ஒருத்தியே இலக்கணை என்னும் மங்கை நல்லாள். அழகும் அறிவும் ஒருங்கமைந்த இவளிடம் இன்பந்துய்த்து மகிழ்கிறான் சீவகன். ஒருநாள் இலக்கணையின் அலங்காரம் சீவகனை மிகவும் கவர்ந்தது; பார்த்துப் பார்த்து அலுத்த அழகுதான். என்றாலும் அன்றைய அவள் அழகு அவனுள் ஒரு வெறியினை உண்டாக்கியது. அழகொழுக எழுதிப்பார்த்திருக்கும் உயிரோவியமாக அவள் அன்று காட்சி தந்தாள்.

கண் இமைக்காமல் அவள் அழகினை அனுபவித்தான் சீவகன். கண் கரித்தது; இன்ப உணர்வு உள்ளத்திலே முகிழ்ந்தது. சீவகன் கண்களில் ஆனந்தக் கண்ணீர் வடிந்தது. காதலனின் கண்ணீரைக் கண்டாள் இலக்கணை; அவ்வளவுதான்—வந்து விட்டது கோபம்; பிறந்தது ஊடல். "யாரோ ஒரு பெண்ணை நினைந்து நினைந்து வருந்திக் கண்ணீர் விடும் உன்னுடன் இன்பம் அனுபவிப்பது விரும்பத் தக்கதன்று" என வேதனையுடன் கூறி ஊடல் கொள்கிறாள் இலக்கணை. சீவகனோ, பாவம்—செயலற்றுத் தவிக்கிறான். இக்காட்சியினை அழகுபடக் கூறுகிறார் ஆசிரியர்.

" மாதர்தம் வனப்பு நோக்கி மகிழ்ந்து
கண் இமைத்தல் செல்லான்,
காதலித் திருப்பக் கண்கள் கரிந்து
நீர் வரக்கண்டு, அம்ம,
பேதமை பிறரை உள்ளி அழுபவர்ச்
சேர்தல் என்றாள்
வேதனை பெருகி வேற்கண் தீயுமிழ்ந்து
இட்ட வன்றே

(இலக்கணை—129)

இத்துடன் நின்று விடவில்லை இலக்கணை. சாந்தினை அழித்தாள்; மலர் மாலையினைப் பிய்த்து எறிந்தாள்; அணிகளை அங்கொன்றும் இங்கொன்றுமாக வீசினாள்; விம்மினாள்; வெதும்பினாள்; மனம் நொந்தாள். தன்கணவன் வேறொரு பெண்ணை எண்ணி ஏங்கி அழுதான் என்ற தவறான நினைப்பை அவளால் மாற்ற முடியவில்லை.

சீவகன் என்ன செய்வான்? நிலை குலைந்தான்; கொஞ்சினான்; கெஞ்சினான்; முடியவில்லை. அவ்வேளை அவனருகில் பறந்து வந்தது ஒரு வண்டு. அதைப் பார்த்துப் பேசுகிறான்.

''வண்டுகாள் வருடி, நங்கை வரந்தர
மொழிமின்..............'

(இலக்கணை—132)

என வண்டினிடம் கெஞ்சுகிறன். 'வண்டே! எனக்காக என் மனைவியின் காலை வருடி ஊடல் தீர்ப்பாய்' என்ற சீவகனின் கூற்று நம்முள் இரக்கத்தினை உண்டாக்கு கின்றது. ஆனல் இலக்கணையின் மனமோ இரங்கவில்லை. அனலிடை மெழுகுபோல சீவகன் உருகுகிறன். அன்றைய நிலவு வீணாகிவிடுமோ என அஞ்சுகிறன். இறுதியில் சீவகனே அவள் அடிகளில் விழுந்து வணங்கி மன்னிக்கும்படி கூறுகிறன். ஆனல் இலக்கணையின் மனம் கல்லாகி விட்டதே!

இந்த ஊடல் நாடகத்தை நீடிக்க விரும்பவில்லை ஆசிரியர். காதலரின் பிணக்கினைத் தீர்த்து மீண்டும் கூடி மகிழும்படி செய்ய வேண்டும் எனக் கருதுகிறர் திருத்தக்க தேவர். தொல்காப்பியர் கூறிச் சென்ற ஊடல் தீர்க்கும் வாயில்களினின்றும் புதுமை காண விரும்புகிறர். கிளியையும், நாகணவாய்ப் பறவையினையும் காதலரின் ஊடல் தீர்க்கும் கருவியாக அமைக்கிறர். இலக்கணையின் வீட்டில் அவள் ஆதரவில் வளர்ந்து வருகின்ற இப் பறவைகள் தங்கள் தலைவிக்கும் தலைவனுக்கும் நடக்கும் ஊடல் கூத்தினையும், தலைவன் தலைவியின் காலில் விழுந்து கிடப்பதையும் கூர்ந்து நோக்கின.

ஊடல் நாடகத்தினுள் மற்றொரு நாடகம். கிளியும் நாகணவாயும் தமக்குள் பேசிக் கொள்கின்றன. 'காதலனே காலில் விழுந்து கெஞ்சுகிறன். ஆனல் காதலியின் உள்ளத்தில் சற்றும் கருணை பிறக்கவில்லையே! இவள் மனம் என்ன இரும்பா, கல்லா? இக்காட்சியினை நாம் காண்பதை விடச் சாவதே சிறந்தது'' என்று அவை பேசிக் கொண்டன. நாகணவாயைக் காட்டிலும் கிளிக்கு

உள்ளம் கொதிக்கின்றது. தன்னை வளர்த்து வரும் இலக்கணையின் செயல் குறித்து இழிவாகப் பேசுகிறது கிளி.

கிளியின் வேகம் நாகணவாய்க்குப் பிடிக்கவில்லை. "நமக்கென்ன? யாரும் எப்படியும் போகட்டும்; நம்மை வளர்ப்பவள் இலக்கணை. அவள் செயலைக் கண்டிக்க நமக்கு என்ன உரிமை? கிளியே! நீர் இழிவாகப்பேசியதை இலக்கணை அறிந்தால் மூன்று நாளைக்கு உமக்குச் சோறு போடமாட்டாள். எனவே உமது வாயைப் பொத்திக் கொண்டு பேசாமல் இரும்." என்று கிளியிடம் கூறியது நாகணவாய்ப் பறவை.

"பெற்ற கூழ் உண்டு நாளும்
பிணியுழந் திருத்தும் பேதாய்
முற்றிமை சொல்லின் நங்கை
மூன்றுநாள் அடிசில் காட்டாள் :
பொற்ருெடித் தத்தையீரே
பொத்தும் நும் வாயையென்றே
கற்பித்தார் பூவையார் தம்
காரணக் கிளவி தம்மால்

(இலக்கணை—134)

என நாகணவாயின் அறிவுரையை அழகுற வருணிக்கிருர் ஆசிரியர். ஆனல் கிளியோ இதையெல்லாம் கருத்தில் கொள்ளவில்லை. அதற்குத் தன்மான உணர்ச்சி அதிக மாகி விட்டது. "குலப் பண்பற்ற மகளிர் கூடத் தம் காலில் கணவர் விழ ஒப்பமாட்டார்களே! நல்ல குலத்தில் பிறந்த நம் தலைவி இப்படி இருக்கிருளே! இவள் கையால் இனிக் கஞ்சி குடித்து உயிர் வாழ்வதைவிட கயிற்றைக் கழுத்தில் கட்டி நாம் மடிந்து விடுவதே மேல்—" என்று கூறி வருந்திற்று கிளி.

இக்காட்சியினைக் கண்டாள் இலக்கணை. பறவைகளின் பேச்சும், அவைகளின் அன்பு உள்ளமும் அவள் இதயத்தைக் கவர்ந்தன. (பறவைகள் தமிழில் பேசியிருக்க வேண்டும்; அல்லது பறவைகளின் மொழியினை இலக்கணை அறிந்திருக்க வேண்டும்.) ஊடலையும் மறந்து சிரித்து விட்டாள். மங்கையின் சிரிப்பு சீவகனின் உள்ளத்தில் மலர்ச்சியை உண்டாக்கிற்று. 'தேவி வரம் தந்தாள்' என இன்பம் பொங்க இலக்கணையைத் தழுவிக் கொண்டான். 'ஊடலில் தோற்றூர் வென்றூர்.'

பறவைகளின் பேச்சு நாடகம் காதலரின் ஊடல் நாடகத்தை முடித்தது. பறவைகளை ஊடல் தீர்க்கும் கருவியாக அமைத்த புதுமை நம் மனதைக் கவருகின்றது. பறவைகள் மூலம் ஊடல் தீர்த்த புதுமை வேறு எந்த இலக்கியத்திலும் காணுத ஒரு சிறப்பாகும். இம்முறைதான் பிற்காலத் தூது முதலிய சிற்றிலக்கியங்களுக்கு அடிகோலியது.

# இலக்கியத்தில் போராட்டம்

இது போராட்ட காலம். உணவுப் போராட்டம்; உடைப் போராட்டம்; வாழ்க்கைப் போராட்டம்—எதற்கும் போராட்டம். இப்படியாக நமது வாழ்வு சுழல்கின்றது. 'போராட்டம்' என்ற சொல் இந்த நூற்றுண்டின் செல்லக் குழந்தை; அரசியல் சூத்திரதாரிகளின் மந்திரக்கோல். போராட்ட யுகத்தில் வாழும் மனிதன் இலக்கியங்களையும் அக்கண் கொண்டே பார்க்கத் தலைப்பட்டான். அன்றொரு நாள் அன்பர் ஒருவர் பேசினர்—சிலப்பதிகாரம் பற்றி. "வர்க்கப் போராட்டத்தினை அடிப்படையாகக் கொண்டது சிலம்பு. உயர்ந்த நிலையிலுள்ள வணிக சமூகத்தினர்—அவர்களை அடக்கி ஆள நினைக்கும் அரச சமூகத்தினர்—இவர்களின் போராட்டங்களைச் சித்திரிப்பதே சிலப்பதிகாரம்" என்று கேட்ட என் சிந்தனை செயலற்றிருக்க வேண்டும். ஆனல் பலமாக வேலை செய்ய ஆரம்பித்தது. 'நாமும் ஏன் புதுப் போராட்டம் ஒன்றை இலக்கியத்தில் ஆரம்பிக்கக் கூடாது' என்ற எண்ணம் மேலோங்கியது.

பல போராட்டங்களில் சிக்கி, எதிர்ப்பு ஆற்றில் எதிர் நீச்சல் போட்டுப் புகழுடன் வாழ்ந்து வரும் இலக்கியச் சிகரம் கம்பராமாயணம். இவ் இலக்கியத்தில் என் எண்ணம் தோய்ந்தது. இக்காவியம், அறத்திற்கும் மறத்திற்கும் உள்ள போராட்டம் என்றனர் பலர். மனிதனுக்கும் தெய்வத்திற்கும் உள்ள போராட்டம் என்றனர் சிலர். இல்லை! இல்லை! இந்த நாட்டிலே ஏற்பட்ட ஆரிய திராவிடப் போராட்டத்தினைச் சித்திரிப்பதே இராம காவியம் என்று பேசினர் சிலர். கம்பன் என்ற இலக்கியக்

கண்ணுடியிலே நானும் சில போராட்டங்களைக் கண்டேன். முற்றிலும் புதிய போராட்டம். ஆம்! சைவ வைணவப் போராட்டம்.

சோழப் பேரரசின் அரசவைக் கவியாக வாழ்ந்தவன் கம்பன். அப்பேரரசனுடன் ஏற்பட்ட சிறு பிணக்கினுல் அவனை விட்டுப் பிரிந்து வாழ்ந்தான் எனச் செவி வழி வரலாறு கூறுகின்றது. வழி வழியாகச் சைவ சமயத்தை வளர்த்தவர்கள் சோழர்கள். பிற்காலச் சோழர்களின் வளர்ச்சியே சைவத்தின் வளர்ச்சி. தென்னகத்திலே சைவம் தழைக்க இவர்கள் அரும்பாடு பட்டார்கள். தஞ்சைப் பெரிய கோயில் போன்ற திருப்பணிகளும் திருமுறை வகுப்பும் இப்பேரரசின் துணையில் நடைபெற்றன. கண்டராதித்த சோழனை இன்றும் சைவ உலகம் போற்றிப் புகழும். பொதுவாகச் சோழர்களின் அரவணைப்பிலே சைவம் தழைத்தது என்பது மறுக்க முடியாத உண்மை. ஆனுல் வேற்று மதத்தையும் ஒப்ப நோக்கும் உயர்பண்பும் இவர்களிடம் இருந்தது. எனவே தான் கவிச்சக்கரவர்த்தி கம்பனுல் இப்பேரரசில் சில காலம் வாழ முடிந்தது. கவிதையின் எதிரே சமயம் தோற்றது. இந்நிலை நீண்ட நாள் நீடிக்க முடியவில்லை. கம்பன் வைணவன் என்பதை மறுக்க இடமில்லை. சைவம் தழைக்கும் பேரரசில் ஒரு வைணவன் அரசவைக் கவியாக இருப்பதில் சில பெருமக்களுக்குப் பொருமை. இதன் காரணமாக குலோத்துங்க சோழன் அவையிலிருந்து கம்பன் வெளிவர நேர்ந்தது. சமய ஒருமைப்பாடுள்ள சோழன் உள்ளத்தில்கூட நஞ்சு விழுந்து விட்டது. கம்பன் உள்ளமோ அமிர்த ஊற்ருயிற்று. இராமன் புகழ்பாட வேண்டும் என்ற ஆசையும் உண்டாயிற்று—மன்னர்களைப் புகழ்ந்து அலுத்த காரணத்தால்.

சோழன் அவையிலிருந்து வெளிவந்ததும் அவ் வாசை வெறியாயிற்று. ''ஆசைபற்றி அறையலுற்றேன்'' என அவனே கூறுகிறான். வைணவத்தின் பெருமையை நிலைநாட்ட, சைவம் தோற்ற கதையைச் சுட்டிக்காட்ட இராம கதையை—இராமாயணத்தை நிலைக்களனாக் கினான். இக்காவியத்தின் ஒரு சில நிகழ்ச்சிகள் இக் கருத்தினை வலியுறுத்தும்.

இராவணன் சிவபக்தன். இசையால் அப்பெருமானை மகிழ்வித்தவன். தவத்தால் பெற்ற பெருவலி உடை யான். உரத்தால் பெற்ற உளவலியுடையான். சிவனரு ளால் சீரிய வரங்களும் பெற்றவன். இராமனோ திருமால் அவதாரம். சைவ உணர்வு கொண்ட இராவணனுக்கும் திருமால் அவதாரமான இராமனுக்கும் போர் மூளு கின்றது. முதல் நாள் போரில் இராவணன் தோற்று விடுகிறான். ''இன்று போய்ப் போர்க்கு நாளை வா'' என இராமன் சொல்ல இலங்கை நோக்கி வருகிறான். இராவணன், பெரு வீரன்; மாற்றார் அஞ்ச அரசு செலுத்தியவன்; திருமகளும், செயமகளும் உறவாடும் வீரத் திருமார்புடையவன். அப்படிப்பட்ட இராவணன் தோற்றுவிடுகிறான். இவனது இரங்கத்தக்க நிலையினைக் கம்பர் வருணிக்கிறார் :

'' வாரணம் பொருத மார்பும்
வரையினை எடுத்த தோளும்
நாரத முனிவற்கேற்ப நயம்பட
உரைத்த நாவும்
தாரணி மௌலி பத்தும், சங்கரன்
கொடுத்த வாளும்
வீரமும் களத்தே போக்கி,
வெறுங்கையோடு இலங்கை புக்கான் ''

(யுத்த: கும்பகருணன் வதை: 1)

சிவன் வீற்றிருந்த கயிலையை மிக எளிதாகத் தூக்கிய தோள் இராமனுக்கு எதிரில் வலிவிழந்தது. இராவணனின் பாதுகாப்புக்காக சங்கரன் தந்த வாள் இராமனுக்கு எதிரில் பயனற்றுப் போயிற்று. இராவணன் அடைந்த தோல்வி வரையினை எடுத்த தோள் அடைந்த தோல்வி; சங்கரன் தந்த வாள் பெற்ற தோல்வி. சிவனின் ஆற்றல் இராமனுக்கு எதிரில் பலனற்று விட்டது என்பதை உணர்த்த, கம்பன் இதைக் கையாளுகிருன் என்று தோன்றுகிறதல்லவா?

இந்திரசித்து, கும்பகர்ணன் போன்ற பல வீரர்கள் அடுத்தடுத்து மடிகின்றனர். இறுதி நாளன்று மீண்டும் இராவணனும் இராமனும் சந்திக்கின்றனர். போருக்குச் செல்லுமுன் முறையே சிவபூசையை முடித்துச் செல்லுகிருன் இராவணன். ஆற்றலோடு போரிட்டான். இறுதியில் மடிகிருன். சிவபூசையை வழுவாது செய்தவனல் முயன்று பெற்ற பெருந்தவம், யாராலும் வெல்லப்படாய் எனக் கொடுத்த வரம்—இவை யாவும் இராமனது அம்பின் எதிரே செத்துவிடுகின்றன. சிவனை மறவாது சிந்தித்த இராவணனது சீலமும் பயன்படவில்லை. திருமால் வென்ருன் சிவன் தோற்ருன் என்ற கருத்தை மறைமுகமாக வலியுறுத்துவதுடன் இக்கதை முடிவடைகின்றது.

காவியத்திலே நாம் காணும் இக்கருத்தினுக்கு சைவ உலகும் வைணவ உலகும் சான்று பகருகின்றன. தமிழை வளர்க்க வந்த ஆதீனங்கள் இராமாயணத்தின் வளர்ச்சிக்கு எவ்வித முயற்சியும் செய்யவில்லை. திருமுறை மாநாடு, சித்தாந்த மாநாடு, திருமந்திர மாநாடு போன்ற பல மாநாடுகள் ஆதீனங்களின் ஆதரவில் நடைபெறுகின்றன. பயனற்ற புத்தகங்கள் பல அழகான வழவழப்

புத் தாளில் அச்சிடப்பட்டு இவர்களால் வழங்கப் படுகின்றன. ஆனால் கம்பனை அச்சிடும் முயற்சியிலோ, அவன் புகழ்பாடும் மாநாடு கூட்டும் முயற்சியிலோ இவ் ஆதீனங்கள் இதுவரை ஈடுபடவில்லை. பல காலம்வரை 'சைவ நன் மக்கள்' கம்பனைக் கற்காமலே இருந்தார்கள். வைணவ நூல் என இன்றும் பலர் ஒதுக்கி வருகிறார்கள். இராமனை எதிர்த்த இராவணனை 'இராவணேசுவரன்' எனச் சைவ உலகம் போற்றுகின்றது. மண்டோதரியைத் தெய்வக் கற்பினாள் என மணிவாசகர் புகழ்கிறார். திருநீற்றின் பெருமை பற்றிப் பேச வந்த தேவாரம் 'இராவணன் மேலதும் நீறு' எனக் கூறுகின்றது. திருமால் பிறப்பான இராமனை இறுதி மூச்சுவரை எதிர்த்த இராவணனை சைவ உலகம் இவ்வாறு போற்றிப் புகழ்கின்றது.

வைணவ உலகோ இராவணனை அரக்கன் எனத் தூற்றுகிறது. இராவணனுக்குத் துரோகம் செய்து அண்ணனைக் காட்டிக் கொடுத்து இராமனைச் சரணடைந்த வீடணனை 'விபீஷண ஆழ்வார்' என்ற அழகான பெயரால் அழைக்கின்றது. சுக்கிரீவன், மாருதி, குகன் போன்ற இராமனுக்குத் துணை செய்தவர்களையும் ஆழ்வார்கள் எனப் போற்றிப் புகழ்கிறார்கள் வைணவர்கள். இராவணனுக்காகப் போரிட்டு மடிந்து செஞ்சோற்றுக் கடன் கழித்த கும்பகருணனைப் பற்றி வசை பாடுகிறார்கள். வைணவ உலகின் போக்கு இவ்வாறு உள்ளது.

இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு நோக்கினால்' சைவ வைணவப் போராட்டத்தைச் சித்தரிப்பதற்காகவே கம்பன் 'இராம காவியம்' செய்தான்; சைவம் தோற்றது, வைணவம் வென்றது என்று காட்டவும் செய்தான்—என்பன போன்ற முடிவுக்கு நாம் வரலாம்.

அறமும் மறமும் மோதும் காட்சியைச் சிலர் இராம காவியத்தில் கண்டனர். மனிதனும் தெய்வமும் போரிடும் கோலத்தை இவ் விலக்கியத்தில் சிலர் பார்த்தனர். ஆரியமும் திராவிடமும் அமர் புரியும் நிலையினையும் சிலர் கண்டனர். சைவமும் வைணவமும் போரிட்ட புதுக் காட்சியினை நாமும் கண்டோம். நினைப்போர் நினைப்பினுக் கெல்லாம் இலக்கியம் சான்று பகருகின்றது. எண்ணு வோர் எண்ணத்துக் கெல்லாம் உருக் கொடுக்கின்றது. இலக்கியம் கண்ணுடியென்ருல் எதிரிலுள்ள உருவம் தெரிய வேண்டியதுதானே !

ஆனல் ஓர் இலக்கியத்தை இவ்வாறு போராட்டக் கண் கொண்டு பார்ப்பது தவறு. வண்ணக் கண்ணுடி கொண்டு இலக்கியத்தை நோக்குதல் கூடாது. குறிப் பிட்ட எண்ணத்தைக் கருத்திலே கொண்டு இலக்கியத்தை நோக்கினுல் அதன் சுவையினை அறிதல் முடியாது. காய்தல், உவத்தல் இன்றி நடுநிலையோடு, ஆசிரியனது காலம், சூழ்நிலை இவற்றை மனத்தில் கொண்டு கவிஞன் போக்கோடு நாமும் போதல் வேண்டும். இலக்கியங்களை அரசியல் கண்ணேடும், போராட்ட நோக்கோடும் நோக்கினுல் அவை வாழவும் வளரவும் முடியாது. இலக்கியங்களை இலக்கியக் கண்ணேடு பார்த்தல் வேண்டும். அப்போதுதான் அவைகளின் பண்பினை உணர முடியும். அவை வளரவும் வழி பிறக்கும்.

# காவியத்துள் நாடகம்

காவியத்தில் நாடகத் தன்மைகளும் கலந்து தோன்றுதல் வேண்டும் என்பது ஒரு கொள்கை. காவியத்தில் பழகும் கற்றறிந்தோரின் அறிவும் உணர்வும் அந்நாடக இயல்பினைக் காணுந்தோறும் மகிழும். முழு நாடக இலக்கியத்தைப் படித்து அனுபவிப்பதைவிட, காவியத்தோடு கலந்த நாடக இயல்பினைச் சுவைத்து உணர்வது ஒரு தனி இன்பமாகும். அதுவும் இலைமறை காயென, காவியத்துள் தோன்றியும் தோன்றுமலும் இணைந்து,பின்னிப் பிணைந்து கிடக்கும் நாடகத் தன்மையினை அறிவது களிப்பூட்டுவதொன்றாகும். கற்போர் மகிழும் வண்ணம் இதுபோன்ற நுட்ப இயல்பினை ஒரு சில கவிஞர்களாலேயே அமைக்க முடியும். இலக்கிய உலகின் முடிசூடா மன்னனுகத் திகழும் கம்பன் தன் இராம காவியத்தில் இவ்வினிய பண்பினைப் பல இடங்களில் அமைத்துக் காட்டுகிருன்.

கம்பன் தந்த காவியத்தில் நாடகத்தின் நல்ல பண்புகள் பலவற்றை நாம் காண்கிருேம். பல வெளிப்படையாகக் காட்சியளிக்கின்றன. சில மறைந்து தோன்றுகின்றன. மறைந்து விளங்கி, மறையாத இன்பம் நல்கும் நாடக இயல்புகளில் ஒன்றினைப் பார்ப்போம்.

இராமனையும் இலக்குவனையும் தான் செய்யும் வேள்விக்குத் துணையாக அழைத்துச் செல்கிருர் விசுவாமித்திரர். அங்கு இராமனின் கை வண்ண நேர்மையையும், கால் வண்ணச்சீர்மையையும்காண்கிருர்முனிவர். பின்னர் இருவரையும் மிதிலைக்கு அழைத்து வருகிருர். அங்கு கன்னிமாடத் திருந்த மிதிலைச் செல்வியாம் சீதையின் கண்ணையும் கருத்தையும் கவருகிருன் இராமன். பள்ளத்

துள் பாயும் வெள்ளமென இவன் உள்ளமும் அவள் பால் செல்கின்றது. முனிவர் இதையெல்லாம் அறியார். இளைஞர் இருவரையும் அழைத்துக்கொண்டு ஜனகனது அரச சபைக்குச் செல்கின்றார். நாடகத்தின் பொதுக்காட்சி இங்குதான் ஆரம்பமாகின்றது.

மிதிலையில் ஓங்கி உயர்ந்த அத்தாணி மண்டபத்திலே அரச இருக்கை ஒன்றில் அமர்ந்திருக்கிறான் ஜனகன். நீண்டு விரிந்த அந்த அவையிலே நூற்றுக்கணக்கான இருக்கைகள் அழகுற அமைக்கப்பெற்றுள்ளன. மதிநலம் மிகுந்த அமைச்சர்களும், குணநலம் மிகுந்த முனிவர்களும் ஆசனங்களில் அமர்ந்திருக்கின்றனர். ஞானமுனியாகிய சதானந்தன் ஜனகனுக்கு அருகில் விளங்கித் தோன்றுகிறான். அவ்வேளை அருள் பழுத்த திருமுனியுடன் இராம இலக்குவர் களிறு நடையுடன் அவையினுள் நுழைகின்றனர். மன்னனும் மற்றையோரும் எழுந்து—முனிவருக்காக—எதிர் வரவு கொள்கின்றனர்.

முனிவர்—விசுவாமித்திரர்—ஆசனத்தில் அமர்கிறார். பீடுநடையோடு பெருமிதமாக வந்த இராமனும் இலக்குவனும் அருகில் அமர்கின்றனர். அஞ்சன வண்ணக் கரிய செம்மலாம் இராமனின் அழகில் ஜனகன் தன்னை மறக்கிறான். அவையோர் அனைவரும் இராமனையே பார்க்கின்றனர். எங்கும் அமைதி; சில வினாடிகள் சென்றன. தன் நினைவுபெற்ற ஜனகன் முனிவரைக் குறிப்பால் நோக்குகிறான். குறிப்புணர்ந்த முனிவரும் தன்னுடன் வந்த இரு செம்மல்களை அறிமுகம் செய்து வைக்கும் பணியில் ஈடுபடுகிறார். நாடகத்தின் பொதுக்காட்சி இங்கு முடிவடைகின்றது. சிறப்புக்காட்சியும் நாடகத்தின் நுட்பத் திறனும் இனித் தொடங்குகின்றன.

இராமனின் முன்னோர் பெருமை, தந்தை தயரதனின் சிறப்பு, குலப்பண்பு, குணநலன் எல்லாவற்றையும் எடுத்

துக் கூறுகிறுர் விசுவாமித்திரர். பின்னர் முன்னுளோர் புகழை யெல்லாம் தன் புகழாக்கிக்கொண்ட இராமனைப் பற்றிப் பேச ஆரம்பிக்கிறுர். அவனது பீடும் பெருமையும் குறித்து உள்ளவாறு கூறுகிறுர். வேள்வியில் அவர் கண்ட அவன் கை வண்ணத்தையும், பின்னர் கண்ட கால் வண்ணத்தையும் எடுத்தியம்புகிறுர் முனிவர்.

'கோதமன் தன் பன்னிக்கு முன்னை
உருக் கொடுத்தது, இவன்,
போது வென்றது எனப்பொலிந்த
பொலங் கழற்கால் பொடிகண்டாய் ;
......................................"

(பால: வரலாற்றுப் படலம்—31)

என்று கூறிய முனிவருக்கு இந்த இடத்திலே கருத்து உடைபடுகின்றது. மன்னனையே பார்த்துப் பேசிக்கொண்டிருந்த விசுவாமித்திரர், அவையிலுள்ள மற்றையோர் முகங்களையும் பார்த்தார். இராமனைப் பற்றிப் பேசிய ஒவ்வொரு பேச்சும் ஜனகனுக்கு அமுதமென விளங்குகின்றது. ஆனுல் ஒரு சிலரின் முகம் இக்குறிப்பினைக் காட்டவில்லை. ''முனிவர் செய்த வேள்விக்கு முன்னின்று உதவிப் பாதுகாத்தவன் இராமன்; எனவே முனிவருக்கு இராமனிடம் அளப்பிலாப் பாசம் ஏற்பட்டுள்ளது; இதன் காரணமாக உண்மையோடு கற்பனையும் கலந்து அவனைப் புகழ்ந்து பேசுகிறுர் போலும்''—என ஒரு சிலர் அகத்திலே நினைத்தனர். இதை அவர் தம் முகத்தில் உணர்ந்தார் முனிவர். அவர்களது ஐயத்தையும் அதே பாட்டில் தெளிவுபடுத்த நினைக்கிறுர்.

ஐயத்தைத் தெளிவுபடுத்துவதில் இரண்டு முறைகள் உள. ஐயம் கொண்டவனின் கருத்தை நேரடியாக மறுத்துவிடுவது ஒருமுறை; அதே ஐயத்தை ஒப்புக்கொண்டு பின்னர் விளக்கம் தருவது மற்றொரு முறை.

இரண்டாவது வழியை முனிவர் பின்பற்றுகிறார். அவையில் சிலர் நினைத்த நினைப்பை முனிவர் முதலில் ஒப்புக் கொள்கிறார். "(நீங்கள் நினைப்பதுபோல) இராமன் என் உயிரினும் இனியன்தான்; அவனை அன்புடன் நேசிப்பவன் நான்"

"காதல் என்தன் உயிர்மேலும்
இக்கரியோன் பால் உண்டால்;"

என்று ஆணித்தரமாகக் கூறுகிறார் முனிவர். பின்னர் தொடர்ந்து பேசுகிறார். "அதற்காக நான் கற்பனை கலந்து பேசவில்லை. அவனைப் பற்றிப் பேசிய அத்தனை புகழுரையும் உண்மையே; ஐயம் வேண்டாம்"—என்ற குறிப்புத் தோன்ற,

"ஈது, இவன்தன் வரலாறும், புய வலியும்"

எனக் கூறி முடிக்கிறார் விசுவாமித்திரர்.

இம் மூன்று வெவ்வேறு கருத்துக்களும் ஒரே பாட்டில் வருகின்றன. இப்போது பாட்டு முழுவதையும் பார்க்கலாம்.

நாடகத்தின் நல்ல உறுப்புகள் பலவற்றையும் இந்த ஒரு பாட்டினுள் அமைத்துக் காட்டுகிறான் கம்பன். விசுவாமித்திரர் பேசுதல், பேச்சின் கருத்துத் தடைப்படுதல், அவையோரை நோக்குதல், குறிப்புணர்ந்து ஐயம் நீக்குதல்—என்ற இத்துணைக் கருத்துக்களையும் ஒரு பாட்டில் உய்த்துணருமாறு வைத்த கம்பன் திறத்தினைப் போற்றுகிறோம். காவியத்துள் நாடகம் கொஞ்சி மயங்கும் காட்சி கண்டு களிப்படைகிறோம்.

"கோதமன் தன் பன்னிக்கு முன்னை
உருக் கொடுத்தது, இவன்,
போது வென்றது எனப்பொலிந்த
பொலங் கழற்கால் பொடி கண்டாய்;

காதல் என்தன் உயிர்மேலும்
இக்கரியோன் பால் உண்டால் ;
ஈது, இவன்தன் வரலாறும், புயவலியும்'
என உரைத்தான்.''

(பால—வரலாற்றுப்படலம் 31)

நாடகத்தின் நல்ல உறுப்புக்கள் பலவற்றையும் இந்த ஒரு பாட்டினுள் அமைத்துக் காட்டுகின்ருன் கம்பன். விசுவாமித்திரர் பேசுதல், பேச்சின் கருத்துத் தடைபடுதல், அவையோரை நோக்குதல், குறிப்புணர்ந்து ஐயம் நீக்குதல்—என்ற இத்துணைக் கருத்துக்களையும் ஒரு பாட்டில் உய்த்துணருமாறு வைத்த கம்பன் திறத்தினைப் போற்றுகிருேம். காவியத்துள் நாடகம் கொஞ்சி மயங்கும் காட்சிகண்டு களிப்படைகிருேம்.

# மின் ஒளிர் காணம்

தமிழிலக்கிய வரலாற்றிலே காவிய வளர்ச்சி ஒரு தனிப் பகுதியாகும். இப்பகுதியிலே பல காவியங்கள் தோன்றின. சில அழிந்தன; பல வாழ்ந்தன. அவற்றுள் கால வெள்ளத்தை எதிர்த்துக் கலங்கரை விளக்கென வாழும் காவியங்கள் ஒரு சிலவே. கம்பனின் கலைக் கோவிலான இராம காவியம் இவ் வகையில் இன்றும் சிறப்புற்று விளங்குகின்றது.

காவியங்கள் என்றவுடன் கிரேக்க நாட்டுக் காவியங்களே நம் நினைவுக்கு வருகின்றன. தமிழ்க் காவியங்களை விட அவை பழமை வாய்ந்த காரணத்தால் அவற்றைப் பலர் எடுத்துக் காட்டுகின்றனர். காவிய உலகில் ஒருமைப் பாடும், பாத்திரத்திற்குப் பாத்திரம் தன் உள்ளத்தை மாற்றிப்பேசும் காவியக் கவிஞனின் இயல்பும் அந்நாட்டுக் காவிய இலக்கியங்களின் தனிச் சிறப்பாகும். இச் சிறப்புக்கள் அனைத்தையும் கம்பனின் காவியத்திலும் நாம் காண்கிறோம்.

காவியக் கவிஞன் எப்பொழுதுமே தன்னை மறந்தவனாக இருத்தல் வேண்டும். வேறுபட்ட பல பாத்திரங்களை உள்ளடக்கிய ஒரு காவியத்தில் அறத்தின் வழி நிற்பார் சிலர்; மறத்தைத் துணையெனக் கொண்டு வாழ்வர் சிலர்; கொடுமையினை அணிகலனாகக் கொண்டு திரிவர் சிலர்; இவர்களின் நிலையில் நின்று கவிஞன் பேசும்போது தன்னையும் அறமுடையவனாக, மறமுடையவனாக, கொடுமையாளனாக மாற்றிக் கொள்ளுதல் வேண்டும். இப்படிப்பட்ட உள்ளத்தில்தான் உண்மைக் கவிதையும்

வாழும்; இலக்கியமும் தோன்றுதல் கூடும். இவ்வகையில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாக் காவியப் புலவனாகக் கம்பன் திகழ்கிறான்; இவன் காவியத்தில் ஒரு சிறு நிகழ்ச்சியினைப் பார்ப்போம்.

கைகேயி நல்ல உள்ளம் படைத்தவளாக, செம்மனம் உள்ளவளாக வாழ்கிறாள். 'ஆற்றல் சால் கோசலை'யின் அறிவு உள்ளம் இவள் உள்ளம் எனக் கம்பனே கைகேயியைப் போற்றிப் புகழ்கிறான். இராமனைத் தன் மகனாகவே கருதும் தாயுள்ளம் பெற்றவள் கைகேயியே. இராமனைப் பற்றிப் பேச வந்த கம்பன்,

> ''தாய் கையில் வளர்ந்திலன்; வளர்த்தது, தவத்தால்
> கேகையன் மடந்தை, கிளர் ஞாலம் இவன் ஆழ
> ஈகையின் உவந்தனள், இயற்கையிது......''
>
> (அயோத்-கைகேயி சூழ்வினைப் படலம்-101)

எனச் செம்மாந்து கூறுகிறான். கைகேயியின் இந்த நல்ல உள்ளத்தை மந்தரை மாற்றி விடுகிறாள். அவளது தூய சிந்தையும்திரிந்தது; மைந்தருள் வேற்றுமை பாராட்டாத உள்ளத்தில் நஞ்சு விழுந்தது. இராமனைத் தன் மகனாகக் கருதிய தாய்மனம் மெல்ல மறைந்தது; பேய் மனம் தோன்றியது. பரதன் உருவம் மட்டிலுமே அப்பேய் மனத்தில் காட்சியளித்தது. இந்த அளவோடு மட்டிலும் நிற்கவில்லை. இராமனை—மூத்தாளின் மகனை—கொடுமைப் படுத்தும்உள்ளமாகவும் கைகேயியின்அந்த 'நல்ல மனம்' மாறிவிடுகின்றது. தன் மகன் பரதன் நாடாளவும், இராமன் பதினான்கு ஆண்டுகள் காடாளவும் தயரதனை வருத்திப் பெற்றாள்.

தயரதனின் உயிருக்குயிரான, உயிரினும் மேலாயவன் இராமன். எனவே அருமை மகனைப் பிரிந்து தயரதனின் ஆவி நிற்காது. இதைப் பற்றியெல்லாம்

கைகேயி கவலை கொள்ளவில்லை. இராமனை எப்படியும் காட்டிற்கு அனுப்பி விடவேண்டும் என்பதைத் தவிர அவளுக்கு வேறு சிந்தனை இல்லை. அவனை அழைத்து வரும்படி ஏவுகிருள். இராமனும் வருகிருன்; கைகேயி யின் கொடுமை உள்ளம் அவனை நோக்கிக் கட்டளை இடுகின்றது.

" ஆழி சூழ் உலகம் எல்லாம் பரதனே ஆள,
நீ போய்
தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கரும்
தவமேற் கொண்டு
பூழி வெங்கானம் நண்ணி, புண்ணியப்
புனல்கள் ஆடி
ஏழி ரண்டாண்டின் வா" என்று
இயம்பினன் அரசன்' என்ருள்
(அயோத்-கைகேயி சூழ்வினைப் படலம்-111)

இக்கட்டளை கைகேயியின் மாசுபடிந்த மனத்திற்குச் சான்று பகர்கின்றது. இங்குதான் கம்பனின் திறமை யினையும் நாம் பார்க்கிருேம்.

முன்பு கேகயன் மடந்தையின் தூய சிந்தையினைப் போற்றிப் புகழ்ந்தான் கம்பன். மைந்தர் நால்வரையும் ஒப்ப நோக்கிய அத் தாயுள்ளத்தின் பண்பினைப் போற்றி மகிழ்ந்தான். ஆனல் இப்போதோ நிலை மாறிவிட்டது. தன்னுடைய உள்ளத்தையும் கைகேயியின் உள்ளமாகவே மாற்றிவிட்டான் கம்பன். இராமனைக் கொடுமைப் படுத்த வேண்டும் என்றநினைப்பு கைகேயியினிடமும்கம்பனிடமும் ஒத்து வளர்கின்றது. இராமன் செல்லும் கானகத்தைப் புழுதியும் வெப்பமும் நிறைந்த கொடிய கானகமாகக் காணச் செய்கின்றது. "பூழி வெங்கானம் நண்ணி"— எனக் கைகேயியின் வாயிலாகக் கம்பன் கட்டளையிடு கிருன். இராமன் நாட்டை விட்டுக் காட்டுக்குச் சென்

ருலும் அவன் கொடுமைகளேயே அனுபவிக்க வேண்டும் என்ற நியமனம் கைகேயியிடம் வளர்ந்திருந்தது. அதற் கேற்பத் தன் கவிதை உள்ளத்தையும் மாற்றிக்கொள் கிருன் கம்பன்.

'காடு செல்' என்ற அன்னேயின் கட்டளேயினேக் கேட்டான் இராமன். சூழ்ச்சி அறியாத உள்ளம் படைத் தவன்; ஆன்று ஆவிந்து அடங்கிய சான்ருேனின் தகைமையுடையவன். சிற்றன்னேயின் கட்டளே என்ற நினேப்பே அவனுக்கு ஏற்படவில்லே. பெற்ற தாயின் கட்டளே என்றே அவனுடைய அறிவுமனம் நினேக்கின்றது. கானகம் செல்ல ஆணேயிட்டவளே நோக்கி இச்செம்மனம் பேசுகின்றது.

"மன்னவன் பணியன்ருகில் நும்பணி
மறுப்பெனே? என்
பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன்
பெற்ற தன்ருே?
என்னினி உறுதி அப்பால்? இப்பணி
தலேமேல் கொண்டேன்;
மின்னெளிர் கானம் இன்றே போகின்றேன்;
விடையும் கொண்டேன்."

(அயோத்: கைகேயி சூழ்வினேப் படலம்-114)

இராமன் இவ்வாறு பேசும்போது குப்பை மேட்டிலிருந்த கம்பனின் கொடுமை உள்ளம் கோபுரத்திற்கு ஏறுகின் றது; உயர்கின்றது. தன்னே இராமனின் உள்ளம் உடையவனுகச் செய்துகொள்கிருன். இராமனின் கண் கொண்டு கானகத்தைக் காண்கிருன். அங்கு புழுதி தோன்றவில்லே; வெப்பம் தோன்றவில்லே; கொடிய விலங்குகள் காட்சியளிக்கவில்லே. ஆனல் நல்ல குளிர் பூஞ்சோலேயே தோன்றுகின்றது. அறிவொளி பரப்பும் முனிவர்களே அங்கு கம்பன் காண்கிருன். 'பூழி வெங்

கானம்' மறைந்து மின் ஒளிர் கானம் காட்சி தருகின்றது. பாத்திரத்திற்குப் பாத்திரம் பண்பிற்குப் பண்பு தன்னையும் மாற்றிக்கொள்ளும் உயர்ந்த காவியக் கவிஞனாகக் கம்பன் காட்சியளிக்கிறான்.

கைகேயியின் உயர்ந்த உள்ளத்தினை முன்பு கம்பன் வாழ்த்தினான். அவ்வுள்ளம் மந்தரையின் சூழ்ச்சியால் பள்ளத்தில் தள்ளப்படுகின்றது. கம்பனின் உள்ளமும் தாழ்ந்து வருகின்றது. 'பூழி வெங்கானம்' என்ற புன்மையான சொல்லும் அவன் வாக்கிலே பிறக்கின்றது. இராமன் நிலைக்கு மீண்டும் ஓடிவருகிறான் கம்பன். 'அப் பெருமகன் உள்ளம் இமயத்து உச்சியென உயர்ந்து விளங்கக் கண்டான். குமரிப் பள்ளத்தில் கிடந்த கம்பன் 'டென்சிங்' உருவெடுத்தான். அந்த உயர்ந்த உள்ளத்தின் நிலையினின்று அதே கானகத்தை நோக்கினான். 'மின்னொளிர் கான'மாக அதைக் காண முடிந்தது. காவிய உலகின் முடி சூடா மன்னனாக வாழவும் முடிந்தது.

## புதியதோர் முறுவல்

கம்பனைக் கவிதைக் கடல் எனக் கற்றறிந்தோர் கூறுவர். அதுவும் ஆழமும் எல்லையும் காணமுடியாத பெருங்கடல் எனப் புகழ்வர். அக்கடல் பயணத்திலே இன்பம் அனுபவித்த பலர் என்னையும் விரும்பி அழைத்தனர். இன்பமளிக்கும் அக்கடல் பயணம் எனக்கு அச்சத்தினை உண்டாக்கியது. கரையிலேயே தங்கிவிட்டேன். அக்கடற்கரையில் எத்தனையோ கவிதைச் சிப்பிகளும் சிதறிக்கிடக்கக் கண்டேன். விளையாடி மகிழும் சிறுவனைப் போல நானும் அவற்றைப் பொறுக்கினேன். என்ன அதிசயம்! அவ்வளவும் நன்முத்துக்கள். இன்பங்கொண்டேன். நான் பெற்ற 'முத்தின்பத்தை' நண்பர்களும் பெறவேண்டுமல்லவா? எனவே உங்கள் முன் சிலவற்றை வைக்கிறேன்.

நாடாளப் பிறந்த இராமன் காடாளவேண்டும் என்ற கட்டளை பிறந்ததால் சீதையை அழைத்துக்கொண்டு இலக்குவனுடன் கானகம் சென்றான். என்ற கதையினைப் பலரும் அறிவர். அக்கானக வாழ்விலும் இன்பங் கண்டான் இராமன்; மன நிறைவும் கொண்டான். ஒரு நாள் செடியும் கொடியும் செழிப்புற வளர்ந்த மலர்ச்சோலை யொன்றில் தனியிடத்தில் இராமனும் சீதையும் இன்பமாக இருக்கின்றனர். கழிந்த நாட்கள் அவர்களின் உள்ளத்தில் மகிழ்ச்சியினை ஊட்டின. அவ்வேளை ஓர் அழகிய காட்சியினை அவர்கள் கண்டார்கள். அன்னம் ஒன்று தன் அழகிய நடையால் நடந்து வந்தது. சீதையின் அருகில் வந்ததும் விலகிச் சென்றது. இவ்வேளை அருகிலுள்ள குளத்தில் நீருண்ணவந்து கம்பீரமாக நடந்து சென்றது

ஒரு யானை. இவ்விருகாட்சிகளையும் இராமனும் சீதையும் கண்டு மகிழ்ந்தனர்.

அன்னத்தின் பின்னமிலா நடையினைக் கண்ட இராமன், தங்களை விடுத்து அது ஒதுங்கிச் சென்ற பான்மையினையும் நினைத்தான். மின்னல் இடை குலுங்க நடந்துவரும் மிதிலைச் செல்வியாம் சீதையின் முகம் பார்த்தான். அந்தப் பார்வையிலே “உன் வண்ண நடைக்குத் தோற்றல்லவா அன்னம் ஒதுங்கிச் செல்கின்றது”—என்ற குறிப்பினைக் காட்டி சிறிய முறுவல் செய்தான். சீதை இதையெல்லாம் கவனித்ததாகத் தெரியவில்லை. அவள் உள்ளமெல்லாம் பெருமிதமாக நடந்துவந்த அந்த யானையின் நடையிலேயேபடிந்திருந்தது. இதைப் பார்த்தவுடன் தன் காதல் கரிய செம்மலின் களிறு நடைதான் அவள் நினைவிற்கு வந்தது. யானையின் நடையை நோக்கித் தன் காதலன் முகமும் நோக்கினுள். “உங்கள் நடையின் பெருமிதம் இந்த யானைக்கு வரவா போகின்றது ?”—என்று கேட்பதுபோல இருந்தது அப்பார்வை. இக்காட்சி சீதைக்கும் முறுவலை உண்டாக்கியது.

“ஓதிமம் ஒதுங்கக் கண்ட உத்தமன்
உழையள் ஆகும்
சீதை தன் நடையை நோக்கிச்
சிறியதோர் முறுவல் செய்தான்;
மாதவள் தானும், ஆண்டு
வந்துநீர் உண்டு மீளும்
போதகம் நடப்ப நோக்கிப்
புதிய தோர் முறுவல் பூத்தாள்

(ஆரண்ய; பஞ்சவடிப் படலம்--5)

என்று இந்த அழகிய காட்சிகளைச் சொல்லில் வடித்துக் காட்டுகிறுர் கம்பர்.

இப்பாடலைப் படிக்கும்போது அன்னமும் களிறும் அழகாக நடந்து செல்லும் காட்சி நம் மனக்கண்முன் வருகின்றது. இதைத் தொடர்ந்தே ஓர் ஐயமும் எழுகின்றது. ஓதிமம் (அன்னம்) ஒதுங்கக்கண்ட இராமன் சீதையின் சிங்கார நடையுடன் அதன் நடையினை ஒப்பிட்டு 'சிறியதோர் முறுவல் செய்தான். சரி! ஆனால் சீதையோ யானை நடந்து செல்வதை இராமனின் பெருமித நடையுடன் ஒப்பிட்டுப் 'புதியதோர் முறுவல்' செய்தாளாம். என்ன வேடிக்கை! சீதையின் முறுவல் எப்படிப் புதிய முறுவல் ஆகும்? பாட்டின் எதுகை மோனைக்காகக் கம்பர் 'புதியதோர் முறுவல்' எனக் கூறினர் என்று முடிவு கட்ட நம் மனம் துணியவில்லை.

காவியஒருமைப் பாட்டையும்,முன்பின் தொடர்பையும் கம்பர் காவியத்திலே நாம் காணலாம். முன்பு குறிப்பாகச் சொன்ன கருத்திற்குப் பின்னல் விளக்கம் தருவார் கம்பர். முன்பு விளக்கிக் கூறிய ஒன்றினைப் பின்னல் குறிப்பாகச் சுட்டுவார். இது கம்பர் திறங்களில் ஒன்று. எனவே 'புதியதோர் முறுவல்' என்ற தாழ்ப்பாளிற்குரிய திறவுகோலை நாம் தேடுதல் வேண்டும்.

இராமனின் கைவண்ண நேர்மையும், கால்வண்ணச் சீர்மையும் காணப்பெற்ற விசுவாமித்திரர் மிதிலைக்கு அவனை அழைத்துவருகிறர். இலக்குவனும் உடன் வருகிறன். மிதிலை நகரத்து அரச வீதியிலே பெருமித நடை நடந்து வருகிறன் இராமன். சாளரங்கள்தோறும் தாமரை முகங்கள்; அரண்மனைக் கன்னி மாடத்தினின்றும் ஓர் தாமரை முகம் இராமனைக் கண்டது. மிதிலைச் செல்வியாம் சீதையின் அத்திருமுகத்தை அண்ணலும் நோக்கினன். கண்ணோடு கண் இணை கவ்வின. காதலும் பிறந்தது. இராமன் நடந்துவரும் அழகும் வனப்பும் சீதையின் உள்ளத்தைக் கவர்ந்தன;

"என்செய்வது ? வில்லை வளைக்கவேண்டுமே! இவ்வீரனுக்கு அத்திறம் உண்டா? என் உள்ளம் பள்ளத்துள் பாய்ந்த வெள்ளம்போல் இவ்வழகன்பால் சென்று விட்டதே!" என்றெல்லாம் ஏங்குகிருள் சீதை. காதலால் கன்னிமாடத்தில் கலங்கிச் சோர்ந்து கவலைகொள்கிருள். இராமன் நடந்துசென்ற தோற்றம் அவள் உள்ளத்தில் நிழற்படமெனத் தோன்றித் தோன்றி மறைகின்றது. அவளது கன்னி உள்ளத்தை முதலில் ஈர்த்தது அப்பெரு வீரனது களிறுபோன்ற நடைதான். இந்த நடையையும் நடைக்குரியவரையும் எண்ணி எண்ணி ஏங்குகிருள். அந்த வண்ண நடையுடன் நங்கையின் உள்ளமும் நடந்து சென்றுவிட்டது. இதைத் தன்னுள்ளே நினைத்துப் பார்த்து முறுவலிக்கிருள்.

" படர்ந்தொளி பரந்து உயிர் பருகும் ஆகமும்,
தடந்தரு தாமரைத் தாளுமே, அல;
கடந்தரு மாமதக் களி நல் யானைபோல்
நடந்தது கிடந்தது என் உள்ளம் நண்ணியே "

(பால-மிதிலைக் காட்சிப் படலம்—57)

என்று சீதையின் உள்ள நிலையினை நயம்படக் கூறுகிருர் கம்பர். இதிலே சீதையின் காதல் உள்ளத்தினையும் இதன் அடிப்படையில் அவள் மனத்தினுள் பிறந்த பழைய முறுவலையும் நம்மால் காண முடிகின்றது. எனவேதான் கம்பர் 'புதியதோர் முறுவல்' என்ற பொருள் பொதிந்த சொல்லால் சீதையின் முறுவலை அழைக்கிருர். ஆரண்யகாண்டத்திலுள்ள பூட்டின் திறவு கோலைப் பாலகாண்டத்தில் அமைத்திருக்கும் கம்பனின் திறம் போற்றி மகிழ்தற்குரியது. கம்பனது காப்பியக் கடற்கரையிலே நாம் கண்ட முத்தின் முறுவல் ஒளி நம் உள்ளத்தினுள்ளும் இன்ப முறுவலை உண்டாக்கு கின்றது.

## மூக்கில் முகிழ்த்த போர்

மக்களின் உடலுறுப்புகளில் மூக்கே முதலிடம் வகிக்கின்றது. ஒருவனது அறிவின் ஆற்றலையும், திருவின் சிறப்பையும் மூக்கு முன்னின்று உணர்த்தும் எனக் கற்றறிந்தோர் கருதுவர். மூக்கின் அழகே மனிதனின் முழு அழகாகக் கருதப்படுகின்றது. தட்டையான மூக்குடையவனைச் 'சப்பை மூக்கன்' என்கிறோம். நீளமாக இருந்தால் 'கிளிமூக்கன்' எனக் கிண்டலாகப் பேசுகிறோம். அளவோடு அழகாக மூக்கு அமைந்திருத்தல் வேண்டும். ஆயிரத்தில் ஒருவருக்கே இப்படி அமைதல் கூடும். இப்படிப்பட்ட மூக்கின் அடிப்படையில் பிறந்த கதைகளும், புராணங்களும் நாட்டிலே பலஉள.

எகிப்தியப் பேரரசின் அழகு ராணியாகத் திகழ்ந்தவள் கிளியோபாத்ரா ; இவள் கடைக்கண் பார்வைக்காகக் கடுந்தவம் புரிந்தான் ஜூலியஸ் சீசர்—ரோமப் பேரரசின் மதிப்புப் ,பெற்ற மாவீரன். இவள் காதலை வேண்டி உலகப் பேரரசுகட்குள் கடும்போர் நிகழ்ந்தது. எகிப்தியப் பேரரசு அழிந்தொழிந்தது. கிளியோபாத்ரா காரணமாக ரோம் நாட்டின் தலைவர்கட்குள் கலகங்கள் மூண்டன. பலவிதக் காரணங்களுக்காகச் சீசர் கொல்லப் படுகிறான். அந்தோணியும் காதலால் அழிகிறான். இவ்விதமாக இருபெரும் உலகப் பேரரசுகளின் அழிவிற்குக் காரணமாக விளங்கினாள் கிளியோ பாத்ரா. இவள் சாதாரண அழகி அல்லள் ; உலகப் பேரழகி—சிறப்பாக மூக்கழகி ; " கிளியோபாத்ராவின் மூக்கின் நுனி சிறிது குறைந்திருந்தால் உலக வரலாறே மாற்றியமைக்கப் பட்டிருக்கும் " என்று பேசுகிறது ஓர் ஆங்கிலப்

பழமொழி ; இதுபற்றிய செய்திகளை வரலாற்றிலே படிக்கும்பொழுது நமது கருத்துக் கம்பனிடம் செல்கின்றது.

கம்பனும் தனது காவியத்திலே ஒரு மூக்கழகியை உருவாக்கி உலாவவிடுகிறான். அவளிட்ட விதையின் காரணமாக இலங்கைப் பேரரசு அழிகின்றது. மூன்றுலகும் நடுங்க ஆட்சி செய்த வீரப் பெருமகனான இராவணனும் அழிகிறான். இந்த அழிவுக்கெல்லாம் காரணம் சூர்ப்பணகை இழந்த மூக்கு—சாதாரண மூக்கன்று—ஆக்கரிய மூக்கு எனக் கம்பனே கூறுகிறான். மூக்கில் முகிழ்த்த போரைப்பற்றி இவன் காவியத்திலிருந்து சிறிது பார்ப்போம்.

சூர்ப்பணகை—இராவணன் தங்கை; நல்ல அழகி—மூக்கழகி என்று சொன்னாலும் குற்றமில்லை; கண்டோர் அஞ்சி நடுங்கும் வண்ணம் பஞ்சவடிச் சாலையின் முடிசூடா ராணியாக விளங்குகிறாள்; அப்போது, தந்தை பணியால் நாடுவிட்டுக் காடுவந்து அப்பஞ்சவடியிலேயே தங்கியிருக்கின்றனர் இராமனும் இலக்குவனும்.

கற்பின் அணியான சீதையும் உடன் வாழ்கிறாள். இராமனின் அழகுத் திருமேனியைச் சூர்ப்பணகை கண்டாள்; காதல் கொண்டாள். கண்டோர் கருத்தைக் கவரும் கவர்ச்சிமிக்க உடையணிந்து இராமனிடம் வருகிறாள். கருத்தைத் தெரிவிக்கிறாள். இராமன் மறுக்கிறான். கெஞ்சினாள்; கொஞ்சினாள்; இராமன் மனம் கிஞ்சிற்றும் இளகவில்லை. பேரழகு வாய்ந்த சீதை இருப்பதால்தான் தன் காதலை மறுக்கிறான் என நினைத்து அவளைத் தூக்கிச் செல்ல முனைகிறாள். காவல்காத்து நின்ற இலக்குவன் கடுஞ்சினங்கொண்டு அவள் காதையும் அழகுதரும் ஆக்கரிய மூக்கையும் அறுத்து விடுகிறான்.

தன் காது போனதற்காக சூர்ப்பணகை கலங்கவில்லை. மானம் போய் விட்டதற்காக மயங்கவில்லை பெண்மையின் திண்மை குறைந்து விட்டதற்காகக் கவலை கொள்ளவில்லை. ஆனால் பெறுதற்கரிய மூக்குப் போய் விட்டதே என்றுதான் பிதற்றி அழுகிருள். அழகுக்கு அழகு செய்த அருமை மூக்கு அழிந்து விட்டதே என அலறுகிருள். அவள் ஓலத்திலும் ஒப்பாரியிலும் மூக்கே முதலிடம் பெறுகின்றது.

"...........................................மூக்கரிந்த
நரனிருந்து தோள் பார்க்க, நான் கிடந்து புலம்புவதோ"

(ஆரண்ய :சூர்ப்பணகை-101)

எனப் புரண்டு அழுகிருள்.

" நசையாலே மூக்கிழந்து நாணம் இலா
நான் பட்ட
வசையாலே நினது புகழ் மாசுண்டது
ஆகாதோ?..... ......"

(ஆரண்ய : சூர்ப்பணகை-102)

என ஓலமிட்டு உறவினரை அழைக்கிருள்.

" ஆக்கினேன் மனத்து ஆசை? அவ் ஆசை என்
மூக்கினேடு முடிய, முடிந்திலேன்........"

(ஆரண்ய; கரன்வதை—30)

என வருந்துகிருள். இறுதியில் அறுபட்ட தன் மூக்கின் அழகையும், சிறப்பையும் அண்ணன் இராவணனின் திண்தோள் திறத்தையும் திண்மையையும் இராம இலக்குவரிடம் கூறுகிருள் சூர்ப்பணகை. இவர்களை அச்சுறுத்தி எச்சரிக்கை விடுவது போலப் பேசுகிருள்.

" 'ஆக்கரிய மூக்கு உங்கை அரியுண்டாள்'
என்றுரை
நாக்கரியும் தய முகனர்
நாகரிகர் அல்லாமை

மூக்கரிந்து நும் குலத்தை முதலரிந்தீர்;
இனி உமக்குப்
போக்கரிது; அவ் அழகையெலாம்
புல்லிடையே உகுத்தீரே

(ஆரண்ய : சூர்ப்பணகைப் படலம்-117)

என்று கூறி பஞ்ச வடியை விட்டு அகல்கிருள் சூர்ப்பணகை.

மூக்கையரிந்து தன் அழகையெல்லாம் அழித்து விட்ட மானிடரைப் பழிக்குப்பழி வாங்க நினைக்கிருள். இலங்கைப் பேரரசின் இணையற்ற மன்னுக விளங்கும் தன் அண்ணன் இராவணனிடம் முறையிடச் செல்கிருள்.

முக்கோடி வாழ்நாளும் முயன்று பெற்ற பெருந் தவமும் உடைய இராவணன், தங்கையின் கோலங் கண்டு பொங்கி எழுகிருள். தங்கையின் காது போனது கூட அவன் கருத்தைக் கவரவில்லே. ஆனுல் அவளுடைய மணிநாசி குறைந்ததே என வருந்துகிருன். தனக்காகச் சீதையைத் தூக்கிவர முனைந்தபோது மூக்கிழந்ததாகத் தங்கை கூறிய செய்தி கேட்ட இராவணனின் வீரத் தோள்கள் விம்மின.

'' மருந்தனைய தங்கை மணி நாசி
வடி வாளால்
அரிந்தவரும் மானிடர்; அறிந்தும்,
உயிர் வாழ்வார்........''

(ஆரண்ய: இராவணன் அணங்குறு-58)

என ஏங்குகிருன். கேவலம் மனிதர்களால் இந்த மான பங்கம் ஏற்பட்டு விட்டதே என உள்ளம் கொதிக்கிருன். மருந்தனைய தங்கையின் மணிநாசி மானிடரின் வாளுக்கு விருந்தாகி விட்டதே என நினைத்து நினைத்து நெட்டு யிர்க்கிருன். கோபம் குமுறி எழுகின்றது. தங்கையின்

வருணனை கேட்டுத் தன்மனச் சிறையில் வைத்த சீதையின் கற்பனை உருவும் நினைவுக்கு வருகின்றது. இதன் பின்னர் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையெல்லாம் பலரும் அறிவர். சீதையைச் சிறை வைத்தது காரணமாக ஏற்பட்ட இராம இராவணப் போரிலே இராவணன் மடிகிறான். யாராலும் எக்காலத்தும் வெல்ல இயலாத பெருவலியும் இறையருளும் பெற்ற இராவணனின் மரணம் கேட்டு மனைவி மண்டோதரி மயங்கிச் சோர்கிறாள். மலையென மங்காத புகழோடு வாழ்ந்த இராவணன் தன் நிலை தளர்ந்த காரணங்களையெல்லாம் நினைந்து நினைந்து பார்க்கிறாள். கணவன் சாவுக்கும், இலங்கை அழிவுக்கும் சூர்ப்பணகை இழந்த மூக்கும் ஒரு காரணம் என்ற முடிவுக்கு வருகிறாள். அன்று முதல் இன்றுவரை நிகழ்ந்த செய்திகள் அடுக்கடுக்காக அவள் மனத்திலே தோன்றின. மண்டோதரியின் தீனக் குரலை கம்பர் மொழியிலே கேட்பது ஓர் இன்பம்.

"காந்தையருக்கு அணியனைய சானகியார்
பேரழகும் அவர்தம் கற்பும்
ஏந்து புயத்து ராவணனார் காதலும், அச்
சூர்ப்பணகை இழந்த மூக்கும்
வேந்தர்பிரான் தயரதனார் பணியினால்
வெங்கானில் விரதம் பூண்டு
போந்ததுவும் கடைமுறையே புரந்தரனார்
பெருந்தவமாய்ப் போயிற்றம்மா!

(யுத்த:- இராவணன் வதை :-240)

உண்மைதானே! இராவணன் கொடுமை நீங்க இந்திரன் செய்ததவம், திருமால் தயரதன் மைந்தனாய் வருதல், தயரதன் பணியால் இராமன் காடு செல்லுதல், அங்கு சூர்ப்பணகையின் இழந்த மூக்கு; சீதை பால் கொண்ட இராவணன் காதல், காதலுக்கு இணங்காத அத்திருமகளின் சீரிய கற்பு, பெண்கள் ஆண்மையை

அவாவும் அவளுடைய அழகு—இவையெல்லாம் சேர்ந்து இராவணனின் முடிவை உண்டாக்கி விட்டன எனக்கண் கலங்கி மயங்கி அழுகிருள் மண்டோதரி. சானகியார், இராவணனுர், தயரதனுர். எனப் பெருமையுடன் கூறிக் கணவனின் தங்கையை 'அச் சூர்ப்பணகை' எனச் சுட்டிக் காட்டி இழிவுடன் கூறியிருப்பது உலகியலை நினைவூட்டு கிறது. சூர்ப்பணகை இழந்த மூக்கே கணவன் முடிவுக்கும் இலங்கை அழிவுக்கும் காரணம் எனக் கம்பரும் மண்டோதரியும் கருதியதாகத் தோன்றுகிறது. ஏன்? நமக்கும் அப்படித் தானே தோன்றுகிறது.

## அரவக் கொடியோன்

அத்தினபுரத்து அரசவை; மன்னுதி மன்னரெல்லாம் அங்குக் குழுமியிருக்கின்றனர். அமைச்சரும், அரசியல் வல்லுநரும், சூழ்ச்சித் துணைவரும் புடைசூழ அத்தினபுரப் பேரரசன் அமர்ந்திருக்கிறான். அப்போது அந்த அவையிலே ஒரு பெண்! ஆடை குலைவுற்று, 'ஆ'' வென்று அழுது துடிதுடித்து அரற்றுகிறாள்! திடீரென வீரமுழக்கம் செய்கிறாள். ''மணமுடி சூடிய பெருவேந்தர்களே! கேளுங்கள்; இதோ வீற்றிருக்கும் இந்நாட்டின் பேரரசனுடைய இரத்தத்தை என் கூந்தலில் பூசி நறுநெய் குளித்து அதன் பின்னரே என் அவிழ்த்த தலையினை முடிப்பேன்! இது செய்யும்முன் முடியேன்! இது உறுதி! சத்தியம்!!'' இம்முழக்கத்தினைக் கேட்ட சபையினிலே அசைவில்லை, பேச்சில்லை. அச்சடித்த பதுமையைப்போல் இருந்தார் யாவரும்! அவ்வீர மகளே பாஞ்சாலி!—திரௌபதை: இவளின் பழிப்புக்கு ஆளான பேரரசன் தான் அரவக்கொடி பூண்டு அத்தினபுரத்து ஆட்சி பீடத்தை அலங்கரிக்கும் துரியோதனன்! ஒரு பெண்ணின் பழிப்புக்கும் பகைமைக்கும் ஆளாகும் வண்ணம் இவன் என்ன அவ்வளவு கொடுமைக்காரனா?

ஆம்! ''வியாசர் விருந்தை''யும், நல்லாப் பிள்ளையின் 'பாரதத்தை'யும், வில்லியின் 'சொல்லமு'தையும், பாரதியின் 'பாஞ்சாலி சபதத்'தையும் மேலோட்டமாகப் படித்த நமக்கு அப்படித்தான் தோன்றுகிறது என்றாலும் பாரதப் போரில் நிகழ்ந்த பெரும் அவமானத்திற்கு இவனே முழுப் பொறுப்பு என்று சொல்லிவிட முடியாது. இவனும் ஒரு துணைக் காரணமாக இருந்தான் என்று வேண்டுமானால் சொல்லலாம்.

பாரதக் கதையினைப் பலரும் அறிவர். இந்திய மக்களின் எண்ணத்திலும், ஏட்டிலும், வீட்டிலும் பல்லாயிரம் ஆண்டுகளாகப் பயின்றுவந்த கதை. கௌரவரும் பாண்டவரும் தாயாதிக்காரர்கள். மூத்தோன் மைந்தர்கள் துரியோதனனும், தம்பியர் நூற்றுவரும்—இவர்களே கௌரவர்கள். இளையவன் மைந்தர் தருமன் முதலிய ஐவர்—இவர்களே பாண்டவர்கள். ஆட்சிப் பீடத்தைக் கைப்பற்றுவதில் இருவருக்கும் பூசல். இச்சிறு பூசல் பெரும் போராக உருவெடுத்தது. கண்ணபிரானின் வஞ்சகச் சூழ்ச்சி, அறத்திற்கு அஞ்சிச் சாகும் தருமனின் பொறுமை, சூதாட்ட வெறி, அர்ச்சுனனின் காண்டீப வலிமை, பீமனின் நேர்மையற்ற மற்போர், துரியோதனனின் வீரத்தில் பிறந்த போலிக் கௌரவம், பொறுமை, கருணனின் வில்வலி, சகுனியின் சூதாட்டத் திறன், சூழ்ச்சித் திட்டம், அபலை பாஞ்சாலியின் சபதம், இவை அத்தனையும் சேர்ந்து ஒரு பெரும் போரைத் தோற்றுவித்தன. இருபெரும் சாம்ராஜ்யங்கள் அழிந்தொழிந்தன இருவருமே அறத்தைச் சூதாட்டக் காயாக்கிப் போர்• விளையாட்டுப் புரிந்தனர். நஞ்சோடு அமிழ்தம் பிறந்தது போல் இந்த அழிவுப் புயலின் மத்தியில் 'கீதை' ஒளி பிறந்தது. தீமையில் பிறந்த நன்மை இது. இப்பெரும் போரின் கதாநாயகனே துரியோதனன்.

பணிவு அறியா உள்ளமும், துணிவுடைமையும் உடையவன் துரியோதனன்; 'ஆயிரம் யானையின் வலிமையுடையவன்,' என வேதமுனி வியாசர் புகழும் அளவிற்குத் தோள்வலிமையுடையவன்; தந்தை சொல் நெறிப்படி ஆட்சி செய்தான். இவன் தான் நினைத்தபடி தந்தையை நினைக்கச் செய்தான் என்றும் அமைத்துக் கொள்ளலாம். இவன் சபையிலே மந்திரமுணர்ந்த பெரியோர், அறமுணர்ந்த அறிஞர். வீட்டுமன், விதுரன்

போன்ற மெய்யுணர்வு பெற்ற பலர் இருந்தனர். இவ்வளவு சிறப்பாக வீற்றிருந்த துரியோதனனிடம், பொருமை குடிகொண்டிருந்தது. நாட்டை இரண்டாகப் பிரித்து கௌரவரும் பாண்டவரும் ஆண்டு வந்தனர். நாடு முழுதும், மூத்தோன் மகன் என்பதால் தனக்கே சொந்தம் என உரிமை கொண்டாடினன், துரியோதனன். தன் தந்தை பிறவிக் குருடன் ஆனதால் பாண்டவர்கள் சூழ்ச்சி செய்து பாதி நாட்டைக் கைப்பற்றிக்கொண்டார்களென்ற எண்ணம் துரியோதனன் மனத்தில் விழுந்தது; பொருமை பிறந்தது. பாஞ்சாலியை வீரத்தால் அர்ச்சுனன் பெற்ற செய்தி இதை வளர்த்தது. இவனைச் சூழ்ந்துள்ள பொய்நெறித் தம்பியரும், புலைநடைச் சகுனியும், மானவீரமுடைய கர்ணனும் இந்த நச்சு எண்ணத்திற்கு—பொருமைக்கு நீர் பாய்ச்சிக் களையெடுத்து உரமிட்டு மரமாக்கினர்.

துரியோதனன் பாண்டவர் ஆக்கங் கண்டு பொருமை கொண்டதில்கூட தவறில்லை. உரிமையால் தனக்கு வரக்கூடிய நாடு என அவன் உள்ளம் நினைத்தது. ஆனல் அந்த எண்ணத்தை நிறைவேற்ற அவன் கொண்ட வழிகள் அறத்திற்குப் புறம்பானவை. கீழ்மகனும் செய்ய அஞ்சும் வழிகள் அவை. கர்ணனுடைய வீரத்தையும், சகுனியின் வெல்லப் பேச்சையும் அதிகமாக நம்பிவிட்டான். எனவேதான் அறம் கொன்று நாடடைய விரும்பினன். பாண்டவர் புகழ் இவன் பொருமைக்குத் தூபம் இட்டது. அவர்களை மிருகங்களிலும் கேவலமாக நடத்தினன். அவர்கள் துன்பத்தில் இவன் இன்பம் கண்டான். ஆனல் பாண்டவருடைய வம்சத்தையே அழித்து ஒழிக்கும் கொடுமை உள்ளம் இவனிடம் இல்லை. பாண்டவர் ஐவரை மட்டிலுமே விரோதியாக நினைத்தான்; அவர்களை ஒழிக்கவே இவன் பாடுபட்டான். போர்க்களத்

திலே வீழ்ந்துபட்ட துரியோதனனிடம் பாண்டவர்ஐவரின் பச்சிளம் குழந்தைகளின் தலையைக் கொய்து கொண்டு வருகிறான் அசுவத்தாமன். அப்பொழுது புழுவாய்த் துடிக்கிறான் இப்பெரு வீரன். யாரைக் கொல்லவேண்டு மென்று நினைத்தானோ அவரது எதிர்கால வாரிசுகளின் தலையைக் கண்டு மகிழ்ந்திருக்க வேண்டும்; மாறாக வேதனைப்படுகிறான். "என் எதிரி பாண்டவர்கள்தான். இச்சிறுவர்களை ஏன் கொன்றாய்? நீ அந்தணன் தானா?", என்றெல்லாம் கண்கலங்கி அரற்றுகின்றான். பகைவனின் குலம் அழிந்ததற்கு வருந்திக் கண்ணீர்விடும் நல்ல உள்ளத்தினை நாம் இங்குக் காண்கிறோம்.

மான வீரத்தைப் பெரிதென மதிப்பவன் இப் பேரரசன். வனத்திலே வாழும் பாண்டவர்களைக் கொடுமைப்படுத்த நினைக்கிறான் துரியோதனன்; கர்ணன் போன்ற வில்வல்லோர் புடைசூழ கானகம் சென்றான். அங்கு எதிர்பாராத விதமாகக் கந்தர்வர்களோடு போர் ஏற்பட்டது. போரில் துரியோதனன் கூட்டம் தோற்றது. இதுகேட்ட அர்ச்சுனனும் பீமனும் தக்க சமயத்தில் உதவி செய்து இவர்களைக் காப்பாற்றினார்கள். இந்நிகழ்ச்சி துரியோதனனை மிகவும் வருத்திற்று; "போரில் நான் இறந்துபோயிருந்தால் எவ்வளவோ நன்றாக இருந்திருக் குமே! என் பகைவர்களால் நான் காப்பாற்றப்பட்டது என் வீரத்திற்கு மாசு! இங்கேயே உண்ணா நோன்பிருந்து உயிர்விடப் போகிறேன். என்னைப் போன்ற கோழையை இனி இந்த நாடு தாங்காது", என உளம் நொந்து கூறு கிறான். இப்பெரு வீரனின் ஆண்மையும், மானமும் நிறைந்த உள்ளத்தை நாம் இங்குக் காண்கிறோம். "நாணால் உயிரைத் துறப்பர்; உயிர்ப்பொருட்டால் நாண் துறவார்" என்ற குறள் நம் நினைவிற்கு வருகின்றது. ஆனால் துரி யோதனின் வீர வாழ்வுக்கு அவனது துணைவர் கூட்டம்

இடம் தரவில்லை. இந்த எண்ணத்தை நண்பர்கள் வளர விடவில்லை. சகுனியின் பேச்சாற்றலும் கர்ணனின் வீர உரையும் தம்பியரின் புலம்பலும் இந்த நல்ல உள்ளத்தை முளையிலேயே கருக்கிவிட்டன.

பாண்டவரின் நாட்டைச் சூதாடிக் கைப்பற்றியது ஒரு பெரும் குற்றமென நாம் நினைக்கிறோம். இச் சூதை விரும்பியே தருமன் வருகிறான். சூதிலே தருமனுக்கு ஆசை அதிகம். இதைத் தூண்டிவிட்டவன் துரியோதனன். அணையும் விளக்கைத் தூண்டிவிட்டது ஒரு பெரும் குற்றம்தான். ஆனால் தருமன் உறுதியாக மறுத்திருந்தால் சூதாட்டமே நடந்திருக்காது. இரண்டு கையும் தட்டினால் தானே ஓசை! பாஞ்சாலியின் துகில் உரியும்போது காட்டிய பொறுமையைத் தருமன் இங்குக் காட்டியிருக்க வேண்டும். 'சூது, கள், மகளிர் இந்த மூன்றிலும் சுகம் கண்டவர்கள் அதையே நினைத்துக் கொண்டிருப்பர்' என வியாசர் கூறுகிறார். சூதின் வெறியிலே தான் நிலைகுலைந்தான் தருமன். கண்மூடித்தனமாக நாட்டை, நகரை, தம்பியரை, தன்னை. பண்பை, பகுத்தறிவை—ஏன் மனைவியையே பணயம் வைத்து ஆடும் அளவிற்கு வெறி கொண்டான் தருமன். இதற்குத் துரியோதனன் மட்டும் பொறுப்பாக முடியாது. பலரறியப் பகிரங்கமாக ஆடிய ஆட்டம்! தருமனின் உறுதியற்ற உள்ளமும், சூதின் போதையுமே இதன் அடிப்படைக் காரணங்கள். சூதாட்டத்தின் முழுபொறுப்பையும் துரியோதனன் தலையில் போட்டு அவனை அமிழ்த்துவதைவிடத் தருமனும் இதற்குக் காரணம் என்று கொள்வது தவறாகாது.

நட்பைக் காப்பதில் துரியோதனன் ஒப்புயர்வற்று விளங்கினான். கர்ணனுடன் இவன் கொண்ட நட்பை இலக்கிய உலகம் இன்றும் போற்றிப் புகழ்கின்றது. வில்லிப்புத்தூராரின் கவிதை உள்ளத்தை இவர்கள்

நட்புக் கவர்கின்றது. கர்ணனைத் தேரோட்டி மகன் என்று பாராமல் அவனுக்கு அங்க நாட்டு அரசுரிமையினைத் தந்து தன்னோடு சரிசமமாக வீற்றிருக்கச் செய்தான்; அவன் வாழ்வே தன் வாழ்வாகக் கருதினான். தன் அருமை மனைவி—பட்டத்து இராணி—பானுமதியோடு தனியிடத்தில் சொக்கட்டான் ஆடுவதற்குக்கூட அனுமதி தந்தான் ஒருநாள் இவர்கள் சொக்கட்டான் ஆடும்போது துரியோதனன் வர, பானுமதி எழுந்திருந்தாள். மன்னன் வரவைக் கவனியாத கர்ணன், 'விளையாட்டு முடியாமல் செல்கிறாள்' என நினைத்து அவள் புடவைத் தலைப்பைப் பிடித்திழுக்கிறான். மேகலையின் மணி உதிர்ந்தது. இதைக் கண்ட துரியோதனன் "உதிர்ந்த மணிகளை எடுக்கவோ, கோக்கவோ." எனப் பரிவுடன் கேட்கிறான். இச்சொல்லும் செயலும் நம்மைக் கவர்கின்றன. மாசுமறுவற்ற கர்ணன் உள்ளத்தை உணரும் ஆற்றல் பெற்றவன் துரியோதனன்; தன் மனைவியின் திண்ணிய கற்பைப் பற்றியும் உணர்ந்தான் இவன். இச்செயல் இப்பேரரசனைக் கோபுரத்தில் உயர்த்தி விடுகின்றது; நட்புலகின் நந்தா விளக்காக இன்னும் ஒளி தருகின்றது. அர்ஜுனன் என்ற எதிரியைத் தொலைப்பதற்குக் கர்ணனைப் படைக்கலமாக நினைத்துத்தான் இவன் அன்பு செலுத்தி நட்புக் கொண்டான்—இது உண்மை நட்பாகாது என்று சிலர் கூறுவர். இக்கருத்து அவ்வளவு வலுவுடையதன்று.

துரியோதனனிடம் நல்ல பண்பும் தீய பண்பும் இணைந்தே இருந்தன. தீய நட்பால் அவனது நற்பண்புகள் மெதுவாக மறைந்தன. தீய பண்புகள் வளர்ந்து பூதாகாரமாகப் பெருகி விட்டன. ஆக்க வேலையைவிட அழிவிலேதான் வேட்கை அதிகமிருக்கும். ஒற்றுமை ஏற்படுத்துவது கடினம்; குலைப்பது எளிது. தீய செய்திகளையே பலரும் விரும்பிக் கேட்பதை இன்றும் நாம்

காண்கிறோம். துரியோதனனும், இதற்கு விலக்கல்ல. அவனிடம் சூழ்நிலையின் காரணமாக வளர்ந்துவிட்ட தீய குணங்கள் நற்பண்புகளையெல்லாம் அமிழ்த்தி விட்டன. பாண்டவருக்கு ஊசி குத்தக்கூட இடமில்லை எனக் கூறிவிட்டான். இவனது பொறாமையாலும், தீய நட்பாலும், கௌரவரும், பாண்டவரும், போர்முனையில் சந்திக்கின்றனர்.

போரிலே அநீதிகள் பல நடந்தன. அறத்தை வேலி யாகக் கொண்டு வாழும் பாண்டவர்களே அதைக் கொன்றார்கள். நீதி தேவன் எங்கோ ஓடி ஒளிந்தான். துரியோதனனைக் கொல்வதற்காக அறத்தைப் பணயம் வைத்துப் போர் நடந்தது. கௌரவர் பாண்டவர் இரு வருமே போரில் பல அநீதிகளைச் செய்தனர்; கீழ் மகனும் பின்பற்ற அஞ்சும் வழிகளை அறங்கோடாது வாழும் பாண்டவர் கைக் கொண்டனர். கண்ணனின் தூண்டுதலே இதற்குக் காரணம். போர்நெறி மறந்து துரியோதனனைத் தொடையில் அடித்துக் கொன்றான் வீமன். அப் பெரு வீரனின் வீர வாழ்வு முடிந்தது.

தீமையும், நன்மையும் சேர்ந்து தான் உலகம் நன்மையே உள்ள வரையும், தீமையே உள்ள வரையும் நம்மால் காண இயலாது. நற்பண்புகள் வளர வாய்ப் பில்லை. தீய பண்புகள் வளர வாய்ப்பு இருக்கின்றது உள்ளத்திலே கொழுந்து விட்டெரிந்த பொறாமைச் சுடு தீயும், தீய நட்புமே துரியோதனன் வாழ்விற்கு முடிவு தேடின. தீய நட்பில் மகிழும் உலகிற்கு இவன் வாழ்வு ஒரு படிப்பினை.

# கம்பனும் கைவிட்டான்

கம்பனின் கலைக் கோயிலாகிய இராம காவியத்தில் வாலி ஒரு முக்கிய பாததிரம். திறத்திலும் திண்மையிலும் இவனை ஒப்பாரும் மிக்காருமிலர். இலங்கைப் பேரரசின் பெரு வீரனாய்த் திகழ்ந்த இராவணனை வாலிடை தூங்கச் சுற்றி மலைக்கு மலைத் தாவித் துன்புறுத்திய பெருவீரன் இவன். வானர நகரின் பேரரசனாய்த் திகழ்ந்த இவ்வாலி கம்பனின் காவியத்தில் சிலமணி நேரங்களே தோன்று கிறான். அக்குறுகிய காலத்திற்குள் வீரச்செயல் செய்து செத்து மடிகிறான்; நமது அன்பு முழுவதையும் கவர்ந்தும் விடுகிறான். இவன் சாவுக்காக நாம் அழுகிறோம்; இவன் நல்வாழ்வு வாழ்ந்திருக்கக் கூடாதா என ஏங்குகிறோம். சூர்ப்பணகையின் ஆக்கரிய மூக்கு அறுபட்டது இக்காவி யத்தின் முதல் திருப்புமையம் என்றால், வாலியின் சாவு இரண்டாவது திருப்புமையமாகும். இந்த அளவுக்கு இப்பெரு வீரனின் சாவு இக்காவியத்தில் ஒரு நல்ல இடத்தினைப் பெற்றுவிட்டது.

வாலியை இராமன் கொன்றது—அதுவும் மறைந் திருந்து கொன்றது—சரியா? தவறா?—என்றெல்லாம் இலக்கிய உலகில் அன்றும் இன்றும் சொற்போர் திகழ்ந்து வருகின்றது. கம்பனின் காவியத்திலிருந்தே இதற்கு ஆதரவையும் மறுப்பையும் திரட்டி 'மேடைப்போர்' செய்து வருகின்றனர். என்றும் ஓயாத பெரும் போராக இது நடைபெற்றதுவருகின்றது. இவ்விரு சாராரின் கூற்றை யும் கண்டு மேலே செல்வோம்.

சீதையைக் காணாது செயலிழந்த நிலையிலே மன முடைந்து வருகிறான் இராமன். அவன் சிந்தை

எங்கும் சீதையின் திருவுருவே நிறைந்து நிற்கின்றது. அவ்வேளை சுக்கிரீவன் மனைவியை வாலி கவர்ந்தான் என்ற வழக்கு அவனிடம் வருகின்றது. 'பரிவிலன் ஒருவன் இளையோன் தாரம் வெளவினான்' என்ற சொல்லை அப்போதுள்ள மனநிலையில் இராமனால் தாங்க முடியவில்லை. ஆத்திரப்படுகிறான்; ஆத்திரம் அறிவுக்குச் சத்துரு என்பதையும் மறந்தான் இராமன். வாலியைக் கொன்று வானர அரசின் தலைமையும், உன் தாரமும் உனக்குத் தருவேன்'' – எனச் சுக்கிரீவனிடம் உறுதி கூறுகிறான். வரம் பலபெற்ற வாலியுடன் நேருக்கு நேர் நின்று போர் செய்தல் முடியாது. போர் செய்தால் எதிரியின் பாதி வலிமை வாலிக்கு வந்துவிடும். சுக்கிரீவனுக்கு உறுதி கொடுத்த பிறகுதான் இந்த உண்மை இராமனுக்குத் தெரிய வருகின்றது. இராமனுக்கு உள்ள தெய்வீக ஆற்றலால் தன் வலிமையில் பாதி போகாமல் காப்பாற்ற முடியும். ஆனால் நேரில்சென்று போரிடும்போது வாலி சரணடைந்து விட்டால் சுக்கிரீவனுக்குக் கொடுத்த வாக்கு என்ன ஆவது? எனவேதான் மறைந்து நின்று அம்பெய்து வாலியைக் கொன்றான். இச்செயல் சரியே, என ஒரு சாரார் கூறுவர்.

காவியத் தலைவனுக்கு நிதானமும் கூர்ந்த மதியும் தேவையல்லவா? சுக்கிரீவனின் வழக்கைக் கேட்டதும் இராமன் சிந்தித்து இருக்க வேண்டுமே! சீதையின் பொருட்டாக இராவணனுடன் போரிடத் தொடங்குமுன் பலமுறை அவனிடம் தூதனுப்பிய அறநெஞ்சம் வாய்ந்தவனன்றோ இராமன். இப்போது ஒருமுறைகூட வாலியிடம் தூதனுப்ப மறந்து விட்டானே! இவ்வளவு அவசர புத்தி, ஒரு காவிய நாயகனுக்கு இருக்கலாமா? வாய்மையும் மரபும் காத்து மன்னுயிர் துறந்த வள்ளலாம் தயரதனின் மைந்தன் என்பதையும் மறந்து விட்டானே!

நாட்டிலே இல்லறம் துறந்து காடு வந்தவன் இங்கு ‘வில்லறமும்’ துறந்து விட்டானே! மறைந்து நின்று கொல்லலாமா? சொல்லறம் துறவாத சூரியன் மரபுக்கு இச்செயல் எத்தனை இழுக்குத் தெரியுமா? சனகன் பெற்ற ஆவியன்ன அமிழ்தின் வந்த தேவியைப் பிரிந்ததால் பித்துப் பிடித்து இச்செயலைச் செய்யலாமா? அரக்கர் செய்த அழிவுக்குக் குரக்கினத் தரசைக் கொல்லல் நன்றோ? இராமன் வாலியையா கொன்றான்?—அறத்தின் வேலியையன்றோ கொன்று விட்டான். பிறர் மனைவியை விரும்புவது மனிதர்கள் சமுதாயத்தில்தான் பெருங்குற்றம். ஆனால் குரங்கு நாட்டில் இந்நீதி எப்படிப் பொருந்தும்? எனவே இராமன் வாலியைக் கொன்றது—அதுவும் மறைந்து நின்று கொன்றது—பெருங்குற்றம்’’—என வாலிக்கு ‘வக்காலத்து’ வாங்கிப் பேசும் அன்பர்கள் கூறுவார்கள்.

வாலியின் கொலை பற்றி இரு கட்சிகளின் வாதங்களையும் நாம் இப்போது கண்டோம். ஆனால் இது பற்றிக் கம்பனின் கருத்து என்ன என்பதை அறிய நம் மனம் விரும்புகின்றது. தன் காவியத்தில் வாலிக்கு ஒரு சிறந்த இடத்தினை அமைத்துத் தருகிறான் கம்பன். சில மணி நேரங்களே நம்மை வாலியோடு பழக விடுகிறான். அச் சிறிது நேரத்திற்குள் நம் அன்பையெல்லாம் அவன் பெற்று விடுகிறான். காவியம் எங்கணும் நிலைபெற்றுப் பல வீர தீரச் செயல்கள் செய்து அறத்தை நிலை நாட்டிய வில்லின் செல்வனாகிய இராமனுக்கு மாசு கற்பிக்கக் கூடிய அளவில் வாலி நம்மைக் கவர்ந்து விடுகிறான். இராமன் வாலியைக் கொன்றது பற்றிய தன் கருத்தினைக் கம்பன் எங்காவது குறிப்பாக வேனும் கூறியிருக்க வேண்டும் என நாம் நினைக்கிறோம். நம் நினைப்பு வீண் போகவில்லை.

வாலிக்கும் சுக்கிரீவனுக்கும் கடும்போர் நிகழ்கின்றது. சுக்கிரீவன் நிலை தடுமாறுகிறான். வாலியின் கை மேலோங்குகின்றது. அவ்வேளை வாக்கைக் காப்பாற்றுவதற்காக இராமன் மறைந்து நின்று பழியறியா வாலிமேல் அம்பு எய்கிறான். அறம் திகைக்கின்றது; அன்பு அழுகின்றது; கம்பனும் செயலிழக்கிறான். 'நீரும்' நீர்தரு நெருப்பும், வன்காற்றும், கிழ் நிவந்த பாரும் சார்' வலிபடைத்த வாலியின் வீரத் திருமேனியில் மறத்தினை அழிக்கும் இராமனின் அம்பு பாய்கின்றது. இதை வருணிக்கிறான் கம்பன்.

"கார் உண் வார்சுவைக் கதலியின் கனியினைக் கழியச்
சேரும் ஊசியில் சென்றது—நின்றது, என் செப்ப ?''

(வாலிவதை-64)

வாலியை இராமன் மறைந்து எய்தது பற்றிய தன் கருத்தினை இவ்வரிகளின் மூலமாகத்தான் கம்பன் குறிக்கிறான். "கதலியின் கனியில் ஊசி செல்வது போல இராமனின் அம்பு வாலியின் மார்பில் சென்று நின்றது''— என இவ் வரிகளுக்குப் பொருள் கூறுவர். ஆனால் இவ்வரிகளினுள் வேறொரு மறை பொருளும் மறைந்து நிற்கின்றது. இக் குறிப்புப் பொருளினை அறிவதற்கு முன் சில பொதுக் கருத்துக்களை நாம் தெரிதல் வேண்டும்.

இராமனுடைய அம்பு அறந் தோய்ந்த அம்பு; அவன் நெஞ்சமும் அறந்தவழும் நெஞ்சம், அறம் அல்லாதனவற்றை அப்பெருமகன் இதுவரை நினைத்தது மில்லை; செய்தது மில்லை. இராமனுடைய அம்பும் இதுவரை மறத்தைத்தான் வீழ்த்தியது. தாடகை கொலையிலும், மாரீசன் வதையிலும் இந்த அம்பு வியத்தகு காரியங்களைச் செய்தது. தாடகையை எய்த அம்பு அவளுடைய மலையொத்த மேனியை உருவி "கல்லாப் புல்லோர்க்கு நல்லோர் சொன்ன பொருள் எனப்'' போகின்றது.

மாரீசன் வதையிலும் அப்படியே. தீமையே வடிவாய தாடகையையும் மாரீசனையும் இராமன் கொல்ல நினைத்தது சரியே. அப் பெருமகனின் அறங்கோடா அம்பும் அவன் நினைவின் வழியே தன் செயலை ஆற்றிற்று. இராமனின் புகழையே பாடும் கம்பனும் அவ் வீர விளையாட்டுக்களை, அம்பின் திறத்தைச் செம்மாந்து போற்றிப் புகழ்ந்தான். ஆனல் வாலிவதையிலோ முற்றிலும் மாறுபட்ட நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. வீரமும், பக்தியும், பணிவும், துணிவும் வாய்க்கப் பெற்ற வாலியின் மார்பில் எய்த அம்பு முன்னம் சென்ற அம்பைப் போல் உருவிச் செல்லவில்லை. அவன் மார்பில் தைத்து நிற்கின்றது. எப்போதும் இராமனைக் கைவிடாத அம்பு கூட, அறம் திறம்பிய இச் செய்கை நோக்கி இராமனைக் கைவிட்டதாகக் கம்பன் உணர்கிறுன். முன்னம் தாடகை, மாரீசன் வதையின்போது இராமனின் அம்பு ஆற்றிய செயல் அவன் நினைவுக்கு வருகின்றது.

"கார் உண் வார் சுவைக் கதலியின் கனியினைக் கழியச்
சேரும் ஊசியில் சென்றது;"

ஆம்; முன்னம் இவ்வாறு சென்ற அம்பு இப்போது அறந்துஞ்சும் வாலியின் மார்பில் புகுந்து அசைவற்று நின்று விடுகின்றது. இச் செயலை "நின்றது" என அடுத்த சீரால் கம்பன் குறிக்கிறுன்.

அம்பின் செயலைக் கண்ட கம்பனுல் ஒன்றுமே செய்ய முடியவில்லை. இராமனுக்கே தான் செய்யும் செயல் சரியெனப் படவில்லை. அருகில் உள்ள இலக்குவனே அமைதியாக நிற்கிறுன். கைவிடாது உருவிச் செல்லும் அம்பும் இப்போது நின்று விடுகின்றது. இராமனது செயலைச் "சரி" என்று சொல்லி அவனைக் காப்பாற்ற முடியுமா என நினைந்து நினைந்து பார்க்கிறுன். முடியவில்லை.

"என் செப்ப?"

என்று கூறி அவனும் கையை விரித்து விடுகிருன்.

"கார் உண் வார் சுவைக் கதலியின் கனியினைக் கழியச்
சேரும் ஊசியில் சென்றது; நின்றது என் செப்ப?"

என்ற வரிகள் மீண்டும் படிக்கும் போது கம்பனின் குறிப்புப் பொருள்—இராமன் செய்தது தவறு எனச் சுட்டாமல் சுட்டிடும் அவனுடைப் பேராற்றல் நமக்குப் புலனுகின்றது. இராமனின் புகழ் பாடுவதற்காகவே கம்பன் இராம காவியம் செய்தான். என்ருலும் வாலி வதையிலே கம்பனின் இராம பக்தி உள்ளம் மெல்ல மறைந்து 'கவி உள்ளம்' தலை தூக்குவதைக் காண்கிருேம்.

